


**விண்ணுறநீண்டடிதாவியமைந்தனை வேற்கண்மடந்தை விரும்பி**
**கண்ணுறவென்கடல் வண்ணனைக் கூவு கருங்குயிலே யென்ற மாற்றம்**
**பண்ணுறுநான்மறையோர் புதுவை மன்னன் பட்டர்பிரான் கோதை சொன்ன**
**நண்ணுறுவாசகமாலை வல்லார் நமோநாராயணாய வென்பாரே.**

*நாச்சியார் திருமொழி 5-11.*

*வேல் போன்ற கண்களையுடையவளாய், பெண்மைக்கு உரிய குணங்கள் நிறைந்தவளாய், ஸ்வரப்ரதாநமான நான்கு வேதங்களையும் ஓதின ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழ்கிற ஸ்ரீ வில்லிபுத்தூருக்குத் தலைவரான பெரியாழ்வாருடைய மகளான ஆண்டாள் திருவடியானது பரமாகாசத்தளவும் போய்ப் பொருந்தும்படியாக நெடுக வளர்ந்து (உலகங்களை) வியாபித்த மிடுக்கையுடையனான எம்பெருமானை ஆசைப்பட்டு ''ஓ கரிய குயிலே கடல் போன்ற திருநிறத்தை உடையவனான என் காதலனை நான் ஸேவிக்கும்படி நீ கூவு'' என்று நியமித்த பாசுரமாக அருளிச் செய்த போக்யமான இந்த ஸ்ரீ ஸூக்தி மாலையை ஓதவல்லவர்கள் எம்பெருமானுக்கு அந்தரங்க கிங்கரராகப் பெறுவார்கள்.*

டிசம்பர், 1985

# ஸப்தகிரி

இதழ் 7 மலர் 16

தனிப்பிரதி/ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

அட்டையில் : கீதோபதேசம்.

2-வது : திருமலை நவராத்திரி பிரம்மோற்சவத்தின் போது பல்வேறு அலங்காரங்களில் உற்சவர்.

3-வது : கர்னூல் தி.தி.தே. திருமண மண்டபத்தினை ஆந்திர முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள் திறந்து வைத்து உரையாற்றியபோது.

பின்னட்டையில் : திருப்பதி ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயிலின் தெப்போற்சவம்.

சிறப்பாசிரியர் :
திரு. எல். லக்ஷ்மிநாராயண I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன்....

நேற்று நடந்தவற்றை அனுபவமாகக் கொண்டு, நாளை நடக்க இருக்கும் நம் வாழ்க்கைப் பாதைக்கு, இன்று நாம் சீரான வழிமுறைகளை அமைத்திட வேண்டும். இதற்கு நமக்கு இருக்க வேண்டியன தேர்ந்த குறிக்கோள்கள், நேர்மை, கட்டுப்பாடு, கடும்முயற்சி மட்டுமேயாம். எடுக்கும் எந்த முயற்சிக்கும் இடையூறோ, எதிர்ப்போ, குழப்பமோ ஏற்படலாம். ஆனால் அவற்றையெல்லாம், நம் முயற்சியின் அருமையினையும், குறிக்கோளின் உன்னதத்தையும் உலகுக்குக் காட்டிடும் வாய்ப்புக்களாகவே கருத வேண்டும். பல ஆண்டுகளுக்கு முன்னாலேயே மானிட வாழ்க்கை ரகசியத்தினை-இலக்கணத்தினைப் பற்றிய ஏராளமான அனுபவ கருத்துக்களை நமக்கு அள்ளி அளித்துச் சென்றனர் நம் முன்னோர். அவைதாம் நமது சமய இலக்கியங்கள். இவ்இலக்கியப் பேழைகளுள் மேலாம் மரகதப் பேழையாகத் திகழ்வது கண்ணன் வழங்கிய கீதையாகும். ஆன்மீகக் கலாசார அகராதியாகவும், வாழ்க்கைத் துணையாகவும் விளங்கும் கீதையின் பெருமை நாடு கடந்து, மேலையாரின் தத்துவ ஐய வினாக்களுக்கும் ஒரு சிறந்த விளக்க நூலாகத் திகழுகின்றது.

மகா பாரதத்தில் பீஷ்ம பருவத்தில் அர்ஜுனனுக்கும் கிருஷ்ணனுக்கும் இடையே நடைபெறும் உரையாடலாக, 18 அத்தியாயங்களில் 700 ஸ்லோகங்களின்மூலம் தன்னை வெளிப்படுத்தும் இப்பகவத் கீதை, வேதங்களின் சாரமாகும். தத்துவ சாரமான இக்கீதா ஸாகரத்தில், பயன்படுத்தப்படும் பாத்திரத்திற்கு ஏற்றவாறு நீர் கிடைப்பது போன்று, மனித மனத்தின், சிந்தனையின் சிறப்பிற்குத் தக்கவாறு பல அடிப்படை வாழ்க்கை உண்மைகளைப் பெறலாம். மனிதனுக்கும் இறைவனுக்கும் நடைபெற்ற இந்த வினா-விடை உரையாடலில், பயம், அவநம்பிக்கை, குழப்பம் ஆகியவற்றால் சூழப்பட்ட மனிதனுக்கு ஆன்மீகத் துணிவு எனும் அருமருந்து தெரிவிக்கப்படுகிறது.

நமது வாழ்க்கையே அக்குருக்ஷேத்ர போர்க்களம்; அறியாமையே திருதராஷ்ட்ரன்; தனி மனித குழப்பமே அர்ஜுனன்; அதனைத் தீர்த்திடும் அருமருந்தே அத்தேரோட்டி கண்ணன்; உடம்பே தேர்; இந்திரியங்களே அத்தேர்க்குதிரைகள்; மனம், புலன்கள், காமம், பயம், பேராசை, பொறாமை போன்றனவே போர்க்கள எதிரிகள். இவற்றினிடையே நடைபெறும் நிகழ்ச்சிகளின் தத்துவ விளக்க ஆத்ம விசாரணையே கீதை தந்திடும் உபதேசங்கள்.

சுருதியாகவும், ஸ்மிருதியாகவும் விளங்கும் பகவத் கீதை ஜீவாத்மா பரமாத்மா உறவு நிலைகளைப் படம் பிடித்துக் காட்டுகிறது. வாழ்க்கையின் குறி முக்தி. அதற்கு உற்ற வழி யோகம். கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூன்று யோகங்களும் முறையே கீதையில் இடம் பெற்றுள்ளன. இன்று மனிதன் பல பிரச்சனைகளுக்குக் காரணமாகி, முடிவில் அவனே அவனுக்கு ஒரு பிரச்சனையாகிவிடும் அவல நிலையில் உள்ளான். அதனால்தான் எந்த ஒரு காரியத்திலும் சிறிது வெற்றி பெற்றாலும் அதற்காக அவன் பெரிதும் போராட வேண்டியுள்ளது. அதுபோது அவன் பல பிரச்சனைகளை எதிர் கொள்ளும்போது, அவன் எடுக்கும் முடிவுகளும், நடவடிக்கைகளுமே அவனை உயர்த்தவோ தாழ்த்தவோ செய்யும் என்பதைச் சுட்டிக்காட்டத்தான், கீதை ஒரு போர்க்களத்தில் உபதேசிக்கப்பட்டது. மேற்கொள்ளும் பணியில் நிதானமும், அவநம்பிக்கையும், குழப்பமும் ஏற்பட வழி வகுத்தால், எடுக்கப்படும் எந்த விதமான தீவிரமான முயற்சிகளும் பயனற்று வீணாகும் என்பது நமக்குக் கீதை கூறும் செய்தியாகும். கௌரவர்களும் பாண்டவர்களும் நம்மிடம் உள்ள தீய நல்ல இயல்புகளின் பிரதிநிதிகள். பொதுவாக நல்லவைவிட தீயனவே அதிக அளவில் மனிதனிடம் குடிகொண்டுள்ளது என்பதைக் காட்டத்தான் கௌரவர்களின் எண்ணிக்கையும் அதிகமாக உள்ளது. என்றும் இறைவன்மீது உண்மையான பக்தி உணர்வு நம்மிடம் இருந்தால் மட்டும்போதும், அதுவே ஒரு சில நல்ல குணநலன்களை மேம்படையச் செய்ய வழிகோலும் என்பதை பாண்டவர் – கண்ணன் உறவு நமக்குக் காட்டுகின்றது. என்றோ நடைபெற்ற அப்போர்க்கள அறவுரைகள் இன்றைய நடைமுறைக்கு சிறிதும் உதவாது என்று கூறுவது உண்மையாயின், அக்கீதைக்கு அன்றைய சமயத் தலைவர்களும், ஆசார்ய பெருமக்களும் உரை எழுதியிருக்கமாட்டார்கள்; அக்கீதை இன்று கடல் கடந்து சென்றிருக்காது; இன்று மூவாயிரத்திற்கும் மேற்பட்ட விளக்கவுரை நூல்கள் அக்கீதைக்குத் தோன்றியிருக்காது. இராமனின் கதை வாழ்க்கை இலக்கியம் என்றால், கண்ணனின் கீதை ஒரு வாழ்க்கை இலக்கணம் என்று கூறலாம். மனித வாழ்க்கையில் அவ்வப்போது ஏற்படும் தோல்விகளுக்குக் காரணம் ஆசை, பொறாமை, அவநம்பிக்கையே யாகும். அதனால் தான் தியாகம், கடமை, துணிவு ஆகியவற்றிற்குப் பொருள் தெரியாது அவன் விழிக்கின்றான். இந்த விழிப்பு நிலையிலிருந்து அவனை விடுவிக்கவே அன்றே அந்தக் கோகுல நாயகன் மனிதன் எதை உண்ண வேண்டும், எப்போது உறங்க வேண்டும் என்ற அடிப்படை தகவல்களைக்கூட தெரிவித்து, உலகாயுத பயன்களைவிட ஆன்மீக வழிமுறைகள் எவ்வகையில் ஒருவனது உள்ளத்தையும் உடலையும் தூய்மையாக்கி, அவனாற்றான் ஒரு புது சமுதாய மறுமலர்ச்சியினையும் தோற்றுவிக்க முடியும் என்பதைத் தெளிவுப்படுத்தியுள்ளான். இறைக்க, இறைக்கப் பீறிட்டு வரும் அந்த கீதாம்ருத ஊற்றில், ஒரு துளி அறவுரையையாவது நாம் நம் வாழ்க்கையில் நடைமுறையில் செயற்படுத்தினால், அதுவே நாம் நம் சமயத்திற்குச் செய்திடும் அரும்பெரும் தொண்டாக அமைந்திடும்.

# செய்திச் சுருக்கம்



## திருமலையில் :

அண்மையில் ஆந்திர மாநில உயர் நீதி மன்ற தலைமை நீதிபதி திரு. கே. பாஸ்கரன் அவர்கள் திருமலைக்கு வருகை புரிந்து, இறைவனைத் தரிசித்தார். அதுபோது அவர் கோயிலில், தி. தி. தே. திருமலை இணை செயலாட்சித் தலைவர் திரு. வை. சக்ரதாரராவ் அவர்களால் கோயில் மரியாதையுடன் எதிர் கொண்டழைக்கப் பட்டார்.

## புதிய வைர கிரீடம் :

திருச்சானூரில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயிலின் மூல விக்ரகத்திற்குப் புதிய வைர கிரீடம் ஒன்று விரைவில் அணிவிக்கும் வகையில் முயற்சிப் பணிகள் துவங்கியிருக்கின்றன. இந்தக் கிரீடத்திற்கான மாதிரி ஒன்று, ஆந்திர மாநில அற நிலையத் துறையின் தலைமைச் சிற்பி அவர்களால் அமைத்துத் தரப்படும்.

## மற்றும் பல செய்திகள் .

7வது ஐந்தாண்டுத் திட்டடத்தின் கீழ், திருப்பதியில் விரைவில் வானொலி நிலையம் ஒன்று திறக்கப் படும் என்று மத்திய அரசு அறிவித்துள்ளது.

திருமலைக்கு வரும் பேருந்துகளில் ஸ்ரீ அன்னமாச்சார்யா மற்றும் பக்திப் பாடல்களை ஒலித்திடும் வகையில் ஒலிநாடாக் கருவிகளை அப்பேருந்துகளில் இணைப்பதென்று தி. தி. தே. மேலாண்மை முடிவு செய்துள்ளது.

சமூகத் திருமணங்களில் பங்கேற்கும் புதுமணத் தம்பதியிருக்கு, உண்டி மூலமாகக் கிடைக்கப்பெறும் தங்கத்தால் செய்யப்பட்ட தாலியும், புதுத் துணியும், உணவும் இலவசமாக அளிப்பதென்றும் மேலாண்மை முடிவு செய்துள்ளது.

திருமலைக் கோயிலின் மூலவருக்காகவும், திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் கோயில் மூல விக்ரகத்திற்கும், அண்மையில் வெளிநாட்டிலிருந்து வாங்கப்பட்ட வைரக் கற்களைக் கொண்டும், தன்னிடம் உள்ள வைரக் கற்களைக் கொண்டும் வைர கிரீடங்களை செய்து முடிப்பதென்று தி. தி. தே. மேலாண்மை தீர்மானித்துள்ளது. திருமலை மூலவருக்கு இவ் வருடத்திற்குள் ஒரு வெள்ளிக் கிழமையன்று இப்புதிய வைர கிரீடம் அணிவிக்கப்படும்.

தன்னுடைய 'இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா' துறையின்கீழ் இந்து சமயம் சம்பந்தப்பட்ட சமய நிகழ்ச்சிகளை ஆண்டு தோறும் ரூ. 38 இலட்சம் செலவில் தி. தி. தேவஸ்தானம் நடத்தி வருகின்றது. எதிர் காலத்தில் தன்னுடைய இந்நிகழ்ச்சிகளை மேலும் தீவிரமாக்கும் வகையில், செலவுத் தொகையினை இரு மடங்காக்கி, ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், ஸ்ரீ சின்மயா மிஷன், சாது சமாஜ் மற்றும் பல்வேறு சமய நிறுவனங்களின் உதவியுடன் செயற்படுத்த மேலாண்மை தீர்மானித்துள்ளது.

யாத்திரிகர்களின் பிரச்சனைகளைக் கேட்டறிந்து கொள்ளவும், அவர்கள் தரும் புகார்களின் மேல் நடவடிக்கை எடுக்கவும், திருமலையில் தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் பொறுப்பில் ''புகார் மையம்'' ஒன்று செயற்பட உள்ளது.

விரைவில் திருமலையில் 'கம்ப்யூட்டர்' உதவி கொண்டு தங்குவதற்கான காட்டேஜ் அறைகள் ஒதுக்கப் படும் என்று மேலாண்மை தெரிவித்துள்ளது.

ஃ ஃ ஃ

ஸ்ரீநிகமாந்த மகா தேசிகரின் வருடாந்திர உற்சவம் மிகச் சிறப்பாக திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி சன்னதித் தெருவில் ஒரு வாரம் நடைபெற்றது. இறுதி நாளன்று கோயில் உற்சவருடன் ஸ்ரீதேசிகரின் திருவீதி திருவலம் மிகச் சிறப்பாக நடை பெற்றது.

தகவல்: என். எஸ். வீரராகவன்,
திருப்பதி.

## புதிய மருத்துவமனை :

திருப்பதி மலையடிவாரத்தில் (அலிபிரி) ரூ. 5 கோடி செலவில் நவீன வசதிகளைக் கொண்ட மருத்துவமனை ஒன்றினைக் கட்டுவதென்று தி.தி.தே. மேலாண்மை முடிவு செய்துள்ளது.

## நவராத்திரி வருமானம் :

அண்மையில் திருமலையில் நடைபெற்ற நவராத்திரி பிரம்மோற்சவ நாட்களின் போது தி. தி. தேவஸ்தானத்திற்குக் கிடைத்த மொத்த வருமானம் ரூ. 49.1 இலட்சமாகும். இதில் உண்டி மூலமாக கிடைத்த வருமானம் ரூ. 26.9 இலட்சமாகும்.

பங்களாதேஷ் நாட்டில் உள்ள இந்தியக் கோயில்களை விரிவாக்கவும் புதுப்பிக்கவும் அந்நாட்டு அரசு 12 இலட்சம் தாக்காக்களை (ரூ. 6 இலட்சம்) ஒதுக்கியுள்ளது.



கில் அவனுக்கு உதவ பகவான் எந்த வேளையிலும் தயாராக இருப்பார் என்பதைப் பல புராணக் கதைகள் மூலம் அறிந்துள்ள சிலர் அக்கூற்று உண்மைதான் என்றும், கிருஷ்ண சர்மா பலருக்காக பல சந்தர்ப்பங்களில் அய்யப்பனுடன் பேசி அவர் கூறும் பதிலைக் கூறியுள்ளார் என்றும், அவர் கூறியபடியே அய்யப்பன் கூற்றுகி யாவும் நடந்துள்ளதால், அவர் உண்மையாகவே அய்யப்பனுடன் பேசி அவர் கூறுவதைத் தான் பக்தர்களுக்குக் கூறுகின்றார் என நம்பவும் செய்தனர்.

கிருஷ்ணசர்மாவின் பக்திநிரம்பிய பூஜையைக் கண்டு பரவசநிலை அடைந்த கேசவன் அவர் தாள் பணிந்து "ஸ்வாமி! தாங்கள் அய்யப்

---

திரு. S. சந்திர மௌலி,
திருப்பதி.

---

பனுடன் நேருக்கு நேராகப் பேசும் பேறு பெற்றவர் என்று கேள்விப் பட்டேன். என் தீராத வயிற்று வலிக்கான காரணம் என்னவென்று ஐயனிடம் கேட்டுச் சொல்வீர்களா? நான் கடந்த பல வருடங்களாகக் கடுமையான வயிற்றுவலியால் அவதிப் படுகின்றேன். அதற்காக நான்

# சரணம் விளித்தால் மரணம் இல்லை

கேசவன் குடியிருக்கும் ஊருக்கு கிருஷ்ண சர்மா வந்திருந்தார். கிருஷ்ண சர்மா மகா பக்தர். அவர் ஸ்வாமி அய்யப்பன் மேல் அலாதியான பக்தி பூண்டு கடந்த நாற்பது வருடங்களுக்கும் மேலாக சபரிமலை யாத்திரை சென்று அய்யப்பனது திவ்ய மங்கள ஜோதியை தரிசித்து மகிழும் பேறு பெற்றவர். வருடத்தின் எல்லா நாட்களையும் அய்யப்பனை பூஜித்து, உலக நலன் வேண்டும் உத்தம தேச ஸஞ்சாரியான அவரது பூஜையைக் காணவும், அவரிடம் விபூதிப் பிரசாதம் பெறவும் கணக்கற்ற பக்தர்கள் அவரை நாடுவர்.

தன்னலமற்ற அவரது பூஜைக்கு மகிழ்ந்த பகவான் அய்யப்பன் அன்றுடம் அவருக்குக் காட்சி தந்து அவருடன் அளவளாவுவார் எனவும் பலர் கூறுவதுண்டு.

ஆம்! தன்னலமற்ற உத்தமமான ஒருவன் இப்புவியில் உலக நலன் வேண்டி இறைவனைத் தொழுவானு நாடிய வைத்தியர் பலர். உட்கொண்ட மருந்தோ ஏராளம். ஆனல் வலி இன்னும் கூடியதேயின்றி எள்ளளவும் குறையவில்லை. நான் வயிறுர உணவு உட்கொண்டு பல வருடங்களாகின்றன. இனி உறக்கத்தைப் பற்றிக் கூறவே வேண்டாம். பரிசோதித்த டாக்டர்கள் உடலில் யாதொரு கோளாறும் இல்லை என்றே கூறுகின்றனர். கடவுள்தான் இனித் துணை என்ற நிலையில் பல கோயில் குளங்களுக்குச் சென்று வந்தேன். ஆயி

னும் வயிற்றுநோய் நீங்கவில்லை. ஆகையால்தான் தங்கள் மூலம் கடவுளிடம் என்நோய்க்குக் காரணம் யாதென கேட்டுத் தெரிந்துகொள்ள எண்ணினேன்'' என்று கூறினான்.

அவனது பரிதாபமான நிலையை உணர்ந்த சர்மா அவனுக்காக மன மிளகி அப்படியே அய்யப்பரிடம் கேட்பதாகவும், எதற்கும் கவலைப் படாமல் இருக்கும்படியும் கேசவ னுக்கு ஆறுதல் பகன்று அவனை மறு நாள் வரச் சொன்னார்.

வழக்கம் போல் அன்றைய பூஜையை முடித்த கிருஷ்ண சர்மா ஏகாந்தத்தில் ஐயனிடம் ''எம்பெரு மானே! கேசவனுடைய பிணியும் அதற்கான காரணமும் நீவிர் அறியா ததா? அவனுடைய கோரிக்கையும் நியாயமானதுதானே! தயை கூர்ந்து அவனது வயிற்று நோய்க்குக் காரணம் என்னவென்று கூறலா காதோ?'' என்று வினவினார். அதற்கு பகவான் ''சர்மா! கேசவனுக்கு இந் நோய் கரும வினையால் ஏற்பட்ட தாகும். இவன் செய்த வினையின் பயனும் இது இவனை ஏழு ஜென்மங் களுக்குத் தொடரும். இது வரை அனுபவித்த நான்கு ஜென்மங்கள் போக மீதி மூன்று ஜென்மங்கள் அனுபவித்தே தீரவேண்டும். கரு மத்தை வெல்ல யாரால் இயலும்!'' என்று பகன்றார்.

மறுநாள் தன்னைக் காணவந்த கேச வனிடம் சர்மா அவர்கள் அவனு டையது கரும வியாதி என்றும், அஃது முன்வினைப் பயனால் ஏற்பட்ட தென்றும், அதை அனுபவித்தே தீர வேண்டும். நடக்கும் ஜென்மம் போக அடுத்து வரும் ஜென்மங்களில் கூட இது தொடரும் என்று அய்யப் பன் கூறியபடியே கூறினார்.

கேசவனும் தனது வினைப்பயனுக்கு மிகவும் வருந்தி இன்னும் மூன்று ஜென்மங்களுக்கு வயிற்றுவலிதான் என்ற முடிவில் இனி பயனிலா வைத் தியச் சிலவு வேறு எதற்கு என வயிற்றுவலியுடனே நாளைக் கடத்தி வந்தான்.

அந்நாட்களில் நாராயணி அம் மாள் என்கிற அம்மையார் ஒருவர் அய்யப்பன் புகழ்பாடி மகிழும்பக்தர் களில் தலைசிறந்தவராகக் கருதப்பட் டார். அவரது அய்யப்ப கானங் களிலும், நாம ஜபசங்கீர்த்தனங்க ளிலும் மனமுருகிப்போன பக்தர்கள் பலருண்டு. இளமையிலேயே கண வனை இழந்துவிட்ட அவர் அப்பொ ழுது முதலே இறை நாட்டம் மிகுந் தவர். அவரது மனம் அய்யப்பன் பால் ஈர்க்கப்பட்டு, மலை யாத்திரை செய்து ஐயனை தரிசிக்க எண்ணினார். ஆனால் ஐய்யப்பன் மலைக்குச் செல்ல இளவயதுப் பெண்ணான அவர் துணி யக் கூடாது என்றும், மாலை அணிந்த அய்யப்பன்மார்களிடம் சபரிமலை நாதனைக் கண்டு மன அமைதி பெறு வதுதான் தற்சமயம் உகந்தது, பிறகு தகுந்த தருணம் வரும் வரை அதா வது பெண்களுக்கு மாதவிடாய் நிற் கும் வரை பொறுத்திருந்து அதன் பிறகு மாலை அணிவதே உத்தமம், என்ற பெரியோர்களின் வார்த்தை களுக்கு மதிப்பளித்தும் தனது 49வது வயது வரை மாலை அணியா அய்யப்ப பக்தையாய்த் திகழ்ந்து அதன் பிறகு மாலை அணிந்து கடந்த 10 வருடங்களாக சபரிமலை யாத்திரை செய்து அய்யப்பன் புகழ்பாடி மகி ழும் மாசற்ற பெண்மணி அவர்.

உலகில் மானுடராய்ப் பிறந்தவர் உய்யும் வழி என்னவென்றால் ''ஸ்வாமி சரண்'' நாம ஜபாரா யணமே என்ற ஆழ்ந்த கருத்தில் பல ஸங்கீர்த்தனைகள் புனைந்து, அவற்றை ஊர் ஊராகச் சென்று பாடிப் பரவச மடைந்து, கேட்பவர்களையும் ஆனந் தக் கடலில் மூழ்கடித்து விடுவார் நாராயணி அம்மாள்.

நாராயணி அம்மாளைப் பற்றி அறிந்திருந்த சிலர் கேசவனிடம் அம்மையாரைக் கண்டு வணங்கி வரு மாறு கூறினர். கடவுளே இது தீராத கரும வியாதி என்று கூறக்கேட்ட கேசவன் அதன் பிறகு வயிற்றுவலிக் காக மருத்துவரை நாடுவதைத் தவிர்த்து விட்டான். ஆனால் வலி மட்டும் வாட்டிக்கொண்டேதான் இருந்தது. மனது அதைத் தாங்கிக் கொள்ளும் வலிமையையும் பெற்று இருந்தது. ஆனாலும் 'நல்லோரைக் காண்பதும் நன்று' என்ற முது மொழியை நினைவுகூர்ந்து நாராயணி அம்மாவைக் கண்டு, அவரது பஜனை யில் இறை நிறைவைக் கண்டு, மனம் கசிந்து, பெற்ற தாயைப் போல் தோன்றிய அம்மையார் அவர்களின் கால்களில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கோவெனக் கதறி அழுது தனது நோயின் வலிமையையும், கிருஷ்ண சர்மா மூலம் தான் அறிந்து கொண்டதையும் கூறினான்.

நாராயணி அம்மாள் கேசவனுக்கு ஆறுதல் மொழி கூறி அவனது கரும வியாதியை பறந்தோடச் செய்யும் அருமருந்து தன்னிடம் உள்ளதென் றும் கூறவே கேசவன் மனம் சற்று நிம்மதி அடைந்து, அம்மருந்தை தனக்குத் தர இயலுமா என ஆவலு டன் கேட்டான்.

அதற்கு அம்மையார் ''கேசவா! நீ சபரிமலைக்கோயிலுக்குச் சென்று ஐயப்பனை தரிசித்துள்ளாயா?'' என்று வினவினார். சில வருடங்களுக்கு முன் தான் வயிற்றுவலியால் வேத னைப்படுவதைக் கண்ட ஐய்யப்ப பக் தர்கள் சபரிமலைக்குச் சென்று வந் தால் நோய் குணமாக வாய்ப்புண்டு என சொல்லக்கேட்டு அவர்களுடன் சபரிமலை யாத்திரை சென்று வந் தான். ஆனால் பயன் ஒன்றும் இல்லை. ஆகவே மறுமுறை செல்ல வில்லை. ஆகவே அம்மையாரின் கேள்விக்கு ''ஒருமுறை சென்று வந் துள்ளேன் தாயே'' என்று பதிலளித் தான்.

''சரணம் விளிக்கும் பழக்கம் உண்டா?''

''மாலை அணிந்தபோது இருந்தது''

''பிறகென்ன உன் நோய்க்கு மருந்து உன்னிடமே உள்ளதே!''

"அம்மா! நீங்கள் சொல்வது விளங்கவில்லையே?"

"கேசவா! கவனமாகக் கேள். 'சரணம் விளித்தால் மரணம் இல்லை' 'ஐயப்பன் நாமம் அருளின் எல்லை' இராமனை விட 'ராம' நாமம் மஹிமை வாய்ந்தது. அதே போல அய்யப்ப ஸ்வாமியைவிட ஸ்வாமி சரண தாரக மந்திரத்திற்கு மஹிமை அதிகம். அந்த நாம ஜெப கடாக்ஷத்தால் பயனடைந்தோர் பலர். மரணத்தையே ஜெயிக்கக் கூடிய (முக்தியைத் தரக் கூடிய) இந்த நாம ஸங்கீர்த்தனத்தால் விட்டகலா நோயும் உண்டா! அந்த ஸ்வாமி சரண் மந்திர மஹிமையைக்கேள்:-

## 'ஸ்வாமி சரண' ஸலோகம்

ரிஷிப்ரோக் தந்து பூர்வாநாம்
மஹாத்மாஞம் குரோர்மதம் |
ஸ்வாமி சரணம் இத்யேவம்
முத்ராவாக்யம் ப்ரகீர்த்திதம் ||
'ஸ்வா' காரோச்சார மாத்ரேண
ஸ்வாகாரம் தீப்யதேமுதே |
'ம' காரம்து சிவம் புரோக்தம்
'இ' காரம் சக்தி ருக்யதே ||
ஸ்வாத்மானஞ்ச பராத்மானம்
தயோரைக்யாத்தம் சுபம் |
ப்ரஸன்னம் பார ஸம்ஹாரம்
விநீதம் வஸ்ய காரணம் ||
'சம்' பீஜம் சத்ரு ஸம்ஹாரம்
'ரே' பம் ஞாநாக்நி வாசகம் |
'ண' காரம் ஸித்திதம் சாந்தம்
முத்ரா விநயஸாதனம் ||
சாஸ்த்ரு முத்ரா வாக்யமேவம்
என்முகே பரிசோபிதம் |
தன்முகே வஸதேலக்ஷ்மி
வித்யா விதய சாலினி ||
கலௌ சஷ சித்தாஞம்
நராஞம் பரிசுத்தயே |
ரிஷிஞம் புனராத்யாஞம்
உபதேசம் மஹத்தமம் ||

பிராண, அபான, வியான, உதான ஸமான வாயுக்களைக் கட்டுப்படுத்த மிகவும் உசிதமானதும், அனைவரும் எளிதில் உச்சரித்து முக்தி அடைய உகந்ததுவும், ரிஷிகளால் சுற்காலம் தொட்டே உச்சரிக்கப்பட்டு வந்ததும், மஹான்களால் அங்கீகரிக்கப் பட்டதுமான 'ஸ்வாமி சரணம்' எனும் திவ்ய மந்த்ரம் எம்பெருமானுர் ஐயப்பருக்கு மிகவும் ஆனந்தத்தை உண்டாக்குவதாகும்.

'ஸ்வா' என்னும் எழுத்தை உச்சரித்த மாத்திரத்தில் மனத்தின் அடித்தளத்தில் உறைந்துள்ள ஆத்மா ஜெகஜ்ஜோதி மயமான ஒளிக்கதிர்களை உதிர்க்கும். அதாவது அக்ஞானம் எனும் இருள் விலகி ஓடி விடும். இந்த ஆத்மாவே எல்லோரிலும் குடிகொண்டிருக்கும் மங்கள ஸ்வரூபமான சிவஸ்வரூபம். மாயையை அதிஷ்டானமாக்கிக் கொண்டு பரம்பொருள் இந்த பஞ்ச பூதாத்மகமான உலகை சிருஷ்டித்து த்ரிகுணங்கள் எனப்படும் அக்ஞான ஸ்வரூபமான ப்ரகிருதி மாதாவின் மாய வலையில் ஜீவர்களை சிக்கிச் சுழல வைக்கின்றார். அதையும் மீறி த்ரி குணங்களையும் ஜயித்து, ப்ரகிருதி மங்கையை சிவத்துடன் லயிக்கச் செய்து அக்ஞான நிர்மூலம் செய்ய வைக்கும்' என்பதுவே 'ஸ்வாமி' என்னும் பதத்தின் பொருள். இதனால் ஜீவனுக்கு சுபம் உண்டாகும்.

'ச' காரம் என்றால் சத்ரு ஸம்ஹாரம். (இங்கு சத்ருஸம்ஹாரம் என்பதை நம்மிடம் மிகுந்துள்ள காமக்ரோதாதிகள் என்று கொள்ள வேண்டும்) 'ர' காரம் ஞாநாக்நி வாசகம். அதாவது காமக்ரோதங்களை ஜெயித்தவர்களுக்கு சாந்தி கிடைக்கும்.

'முத்ரா' என்ற பதத்திற்கு பக்தர்களின் பவ பாதைகளை நீக்க வல்லதும், ஸ்வாமியை மகிழ்விக்க வல்லதும் என்றும் பொருள். இதை விநயத்தால் மாத்திரமே அடைய முடியும்.

'சாஸ்த்ரு முத்ரா வாக்யம்' எவர் முகத்திலிருந்து (வாயிலிருந்து) உச்சரிக்கப்படுகின்றதோ அவர் முகம் லக்ஷ்மி கடாக்ஷம் நிரம்பப் பெற்றதாய் இருக்கும். அவர்கள் கல்விச் செல்வமும், அருட் செல்வமும் நிரம்பப் பெற்று, அடக்கமாக சுடர் விடுவர்.

ஆகையால் இக்கலியில் கல்மஷ சித்தர்களாய் உழலும் மானுடர்களுக்கு சித்த சுத்தி ஏற்படுவதற்காகவே ரிஷிகள் மகிமை நிரம்பிய இந்த தாரக மந்திரத்தை பகன்றுள்ளனர்.

கேசவா! இனி இத்தாரக நாமத்தை எப்படி எப்படி அழைக்கலாம் என்று கூறுகிறேன் கவனமாகக் கேள்.

சரணங்கள் பலவிதமாகக் கூப்பிடுவார்கள். அவற்றில் 1. வாத்ஸல்ய சரணம், 2. தனிச் சரணம், 3. கூட்டுச் சரணம், 4. ஸங்கேத சரணம், 5. நீண்ட சரணம், 6. நினைர்த்தி சரணம், 7. இடைவிடா சரணம், 8. மௌன சரணம், 9. மன்னிப்பு வேண்டும் சரணம் என்பவை குறிப்பிடத் தகுந்தவையாகும். இவை ஒவ்வொன்றும் இறைவனுடைய (அய்யப்பனுடைய) அருளை விரைந்து பெறுவதற்கு பக்தன் உபயோகிக்கும் வழிகாட்டி என்றும் கொள்ளலாம்.

1. வாத்ஸல்ய சரணம்: பகவானை தனது புத்திரன் அல்லது தமையன் என்ற பாவனையில் அழைத்து மகிழ்வது. எப்படி எனில் தசரதன், பலராமன், யசோதை, குசேலன், பந்தள மன்னன் போன்றோர் ஸாக்ஷாத் பரமாத்மாவே தங்கள் மகவாய், உடன் பிறப்பாய், உற்ற நண்பனாய் இருக்கக் கண்டு அவர்களை எந்த அனுபூதியில் அழைத்து மகிழ்ந்தனரோ அந்நிலையில் மானஸீகமாய்த் தங்களை நிறுத்தி, அய்யப்பனை சிறு குழந்தையாய், பாலகனாய் எண்ணி அழைக்கும் சரணங்களில் வாத்ஸல்யம் நிறைந்து காணப்படும்.

உதாரணம்: ஹரிஹரஸுதனே... சரணமய்யப்பா! மோஹினி ஸுதனே ...சரணமய்யப்பா! சம்புகுமாரனே... சரணமய்யப்பா! சக்தித் திருமகனே சரணமய்யப்பா! ஷண்முக ஸோத

ரனே... சரணமய்யப்பா! கஜமுகன் ஸோதரனே... சரணமய்யப்பா! என்பன.

2. தனிச் சரணம்: பகவான் சன்னிதியில் மெய்யுருகி நின்று தன்னையும், தன்னைச் சார்ந்தவர்களையும் காப்பாற்றக் கோரியும், எடுத்த காரியம் தங்குத் தடை இன்றி நிறைவேற எண்ணியும், வருடா வருடம் சபரிமலை யாத்திரை இடையூறு இன்றி நடந்தேறவும் வேண்டி கூப்பிடும் சரணங்கள் இதில் அடங்கும்.

உதாரணம்: வழி நெடுகிலும் துணை வர வேண்டும் சாமியே... உன் பக்தர்களைக் காக்க வேண்டும் ஸ்வாமியே... கன்னிக்காரைக் காக்க வேண்டும் ஸ்வாமியே ஸர்வரோக நிவாரண தன்வந்த்ரமூர்த்தியே... அக்ஞானத்தில் உழலுகின்றோம் ஸ்வாமியே... ஞானம் பெற வேண்டுகிறேன் ஸ்வாமியே சரணமய்யப்பா போன்ற சரணங்களை ஸ்வாமி பூஜையில் கரம் குவித்து மெய் மறந்து கூப்பிடும் போது உண்டாகும் பரவசத்தை எழுத்தில் வடிப்பதும் கடினம்.

3 கூட்டுச் சரணம்: சபரி மலை யாத்திரையில் கூவப்படும் கூட்டுச் சரணம் வேறெந்த யாத்திரையிலும் காண்பது அபூர்வம். கூட்டம் கூட்டமாக நிறைந்து வரும் பக்தர் குழாத்தில் ஒருவர் 'ஸ்வாமியே...... என்றழைக்க, நிறைந்துள்ள பக்தர்கள் அனைவரும் ஒருங்கிணைந்து ஒரே குரலில் 'சரணமய்யப்பா' என்று முழங்கும்போது அந்தத் தலமனைத்தும் புனிதம் பெறும். குறிப்பாக இக் கூட்டுச் சரணத்தை சபரி மலை மகர விளக்குத் திருநாளன்று கண்டு, கேட்டு பரவச மடைய வேண்டிய ஒன்றாகும். அந்த திவ்ய அனுபூதியில் வாய் பேச முடியாத ஊமைகள் பலர் வாய் திறந்து பேசிய கதைகளும் உண்டு. இச்சரணங்களை ஸ்ரீ அய்யப்பனின் திவ்ய நாமங்களையும் அந்த யாத்திரையில் எதிர்படநேரும் திருத்தலங்களின் பெயர்களையும், ஸ்வாமியின் வரலாறையும் இணைத்து ராகதாளலயத்துடன் முழங்கி மகிழ்வர்.

உதாரணம்: மோட்சம் அளிப்பவனே... சரணமய்யப்பா! அபீஷ்ட வர ப்ரதாயகனே... ஜோதிஸ்வரூபனே... சின்முத்ரதாரியே... ஸர்வ ஜீவாந்தர்யாமியே... சரணமய்யப்பா

'கூடி வாழ்ந்தால் கோடி நன்மை' என்ற முதுமொழிக் கொப்ப கூட்டாகச் சேர்ந்து கூப்பிடும் சரணங்களுக்கு வலிமை அதிகம். வானதிர முழங்கும் இக்கூட்டுச் சரண ஒலியால் சேதன அசேதன வஸ்துக்கள் கூட புனிதம் பெறும் என்பது மிகையாகாது. கூட்டாகச் சேர்ந்து செய்யும் பிரார்த்தனைக்கு வல்மை அதிகம் என்பதைக் கருத்தில் கொண்டுதான் நமது தோழமை மதத்தினரான, மஹம்மதியர்களும், கிருஸ்தவர்களும் அவரவர் ஆலயங்களில், தேவ சபைகளில் கூட்டுப்பிரார்த்தனையைக் கடைப் பிடிக்கின்றனர். ஒரு குறிப்பிட்ட வேளையில் எல்லோரும் ஒன்று கூடி எல்லோரும் இன்புற்றிருக்க பிரார்த்தனை செய்து பலன் பெறுகின்றனர்.

4. ஸங்கேத சரணம்: சபரி மலை யாத்திரைக்கு நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பக்தர்கள் கூட்டம் கூட்டமாகக் கூடுவார்கள். இவர்கள் ஒன்று கூடும் இடங்களில் கூட்டு பிரியாமல் இருப்பதற்கும், மலைப்பாதையில், காட்டில், மேட்டில், இருட்டில் நடக்கும்போது தம் இனத்தவரை அடையாளம் கண்டு கொள்வதற்கு உதவும் வண்ணமும் முன்னமே அவரவர்கள் கூட்டத்தார்க்கு மட்டும் விளங்கும் விதத்தில் ஒருவித நீட்டி முழக்கிய ராகத்துடன் கூடிய ஒரு சரணத்தை தமக்கு ஸங்கேதமாக (அடையாளமாக) ஏற்படுத்திக் கொண்டு அதை அநுஸரித்து யாத்திரையில் கூட்டுப் பிரிதலை தவிர்க்க உதவுவதே ஸங்கேத சரணம்.

உதாரணம்: ச...ர...ண...ம...ய்...ய...ப்...போ! ஸ்...வா...மி...ச...ர...ண...ம்!; அ...ய்...ய...ப்...ப...ன்... ச...ர...ண...ம்! ப...க...வா...ன்.. ச...ர...ண..ம்! ப...க...வ..தி... ச...ர...ண..ம்!

மேற்படி சரணங்களை அவரவர் கூட்டத்தினருக்குப் புரியும் வகையில் ராகம் போட்டுக் கூப்பிட்டுப் பதில் சரணமும் அவர்கள் அதே ரீதியில் தர, யாத்திரை இடர் பாடின்றித் தொடர இச்சரணங்கள் மிகவும் உதவும்.

5. நீண்ட சரணம்: சபரி மலையை நெருங்க நெருங்க பக்தன் பரவசத்தில் தன்னை மறந்து உடலைவிட குரலால் அய்யப்பனை விரைந்து அடைய எண்ணி எழுப்பும் சரண ஒலியே நீண்ட சரணம் என்பது. மூச்சை இழுத்து எவ்வளவு உச்சத்வனியில் அய்யப்பனை அழைக்க முடியுமோ அவ்வளவு நீட்டி அழைப்பதுதான் இச்சரணத்தின் சிறப்பு.

உதாரணம்: ஸ்வாமியே........
.....ய் சரணமய்யப்பா!

6. தீனார்த்தி சரணம்: தம்முடைய ஆர்த்திக, சாரீரக, மானஸீக கஷ்டங்கள் அனைத்தையும் அய்யப்பனிடம் முறையிட்டு நிவாரணம் அளிக்க விளித்தலை தீனார்த்தி (இரைஞ்சல்) சரணம் என்பர். நிச்சயம் கடவுள் நம்மைக் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கையில், எழுத்திலடங்கா பாவனையில் ஸ்வாமியே.. சரணமய்யப்ப சரணமய்யப்ப ஸ்வாமி சரணம்! என்று பகவானை நினைத்து பரவச நிலையில் கூப்பிடும் சரணங்களை தீனார்த்தி சரணம் என்பர்.

'ஆதிமூலமே'! என்றழைத்த யானைக்கும், நாராயண மந்திரத்தால் பிரஹ்லாதனுக்கும், நமச்சிவாய நாமோச் சரணத்தால் மார்க்கண்டேயனுக்கும், 'ஓம் நமோ பகவதே வாஸுதேவாய' என்ற துருவனின் குரலுக்கும் ஓடோடி வந்து உதவியவரல்லவா பகவான். ஆகையால் அழைக்கும் குரலில் உடனே வந்து உதவத் தூண்டும் இரைஞ்சல் ஒலிக்க வேண்டும். பலர் இவ்விதம் பயன் பெற்றுள்ளனர்.

(அடுத்த இதழில் முடியும்)

# நாதன் கோவில் என்னும் நந்திபுர விண்ணகரம்

முன்னுரை :

திருமாலை முதற்கடவுளாகக் கொண்டு வழிபடுவோர் வைணவர் ஆவர். திருமாலிடம் ஆராத அன்பு பூண்டு, பரவசமாகிப் பக்திப்பாடல்களைப் பாடித்தந்த பன்னிரு அடியார்களை ஆழ்வார்கள் என்று வைணவ உலகம் அழைக்கும். இவர்களால் பாடப்பட்ட திருத்தலங்களே திவ்ய தேசங்கள் என்று கொண்டாடப்படுவன. இவை நூற்றெட்டு என்பர்; இவற்றுள் சோழநாட்டில் அமைந்துள்ள திருப்பதிகள் நாற்பதில் நந்திபுரவிண்ணகரம் என்ற நாதன் கோயில் 21வது ஆகும்.

இருப்பிடம் :

இத்தலம் தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்துக்கு அருகே அங்கிருந்து தென்பால் மூன்று கல் தொலைவிலுள்ளது. இவ்வூரையடைய கும்பகோண நகரிலிருந்து டவுன் பஸ்கள் உள. முடிகொண்ட சோழபேராற்றிற்கும், திருமலைராசன் ஆற்றுக்கும் இடைப்பட்டு நீர்வளம், நிலவளம் மிக்கு விளங்குகிறது.

இயற்கை நலம் :

ஒரு காலத்தில் அரசப் பெருமக்கள் வாழ்கின்ற பெருநகரமாகத் திகழ்ந்த இவ்வூர் இன்று அமைதியான சிற்றூராகக் காண்கிறது. ஊரைச்சுற்றிலும் பசுமையான வயல்கள்—நிழல் மலிந்து குளிர்ந்து விளங்கும் சோலைகள் — ஆங்காங்கு இடைப்பட்டுப் பளிச்சிடும் நீர்நிலைகள். இந்நீர்நிலைகளில் நீலமும், நெய்தலும், தாமரையும் மலர்ந்திருக்கும். குயிலினமும், சேலினமும் ஊடே நெளிந்தோடும் பல வண்ணப் புள்ளினங்கள் சுற்றிப் பறக்கும். இச்சிற்றூரைப் பாடிய திருமங்கையாழ்வார், 1) நறைசெய் பொழில் மழை தவழும் நந்திபுர விண்ணகரம் என்றும் (2) வம்பு மலர்கின்ற பொழில் பைம்பொன் வருதும்பிமணி கங்குல் வயல்சூழ் என்றும் (3) கொம்புகுதி கொண்டு குயில் கூவ மயில் ஆலும் எழிலார் புறவு சேர்.... என்றும் புகழ்ந்துள்ளார். (4) பாசுரப் பொருள் நயம் :- (5-10-7) மந்த முழவோசை மழையாக எழுகார் மயில்களாடு பொழில் சூழ்...... நண்ணு மனமே.ஊரைச்சுற்றிச் சூழ்ந்துள்ள சோலைகளில் கருங்குயில்களும் வண்ண மயில்களும் மிக அதிகம். மயில்கள் நீண்ட கருமேகத்தைக் கண்டால் தோகை விரித்தாடும். மழையும், புழுக்கமும், இடியும், மின்னலும் மயிலுக்கு இன்பம் தருவன. இவற்றைக் கண்டால் ஆனந்தம் மேலிட்டு ஆடத் தொடங்கும். இத்தலச் சோலைகளில் இவை உரிய கால உணர்வின்றி நினைத்துநினைத்து ஆடிக் கொண்டே இருக்கும். காரணம் மரங்கள் செழித்து, செறிந்து, நெடிதுயர்ந்து வளர்ந்துள்ளதால் சோலைகள் இருண்டிருக்கும். இவ்விருட்டை மயில்கள் கார்மேகமாக மருண்டன போலும். நகர்ப்புறத்தில் கலைவல்ல மெல்லியலார் நடமாட யாழும் முழவும் நன்கதிர, இவ்வொலியினை மேகங்கள் இடி இடிப்பதாக மயில்கள் மருண்டன. இருளினைக் கார் மேகமாகவும், முழவொலியை இடியாகவும் மருண்ட மயில் கூட்டங்கள் மகிழ்ச்சி பொங்க ஆடாதிருக்குமா? ஆடுகின்றன. இம்மருட்சியைக் கூறு முகத்தால் மக்களது கலையுயர்வையும், இன்ப வாழ்வையும் ஆழ்வார் நம் மனக் கண்முன் நிறுத்துகிருர். விலங்குகள்கூட மயங்கின என்பதால், ஈண்டு ஞான சம்பந்தரது திருவையாற்றுத் தேவாரப் பதிகத்தில் ''வலம் வந்த வடவார்கள் நடமாட முழவதிர மழை யென்றஞ்சி| சில மந்தி அலமந்து மரமேறி முகில்பார்க்கும் திருவையாறே'' என்று வந்துள்ள பகுதி ஒப்பு நோக்கி இன்புறுதற்குரியது.

தல வரலாறு :

மதுவினை மாந்தி என்ற பண்ணினை வண்டுகள் இசைக்கின்றன. இயற்கையின் எழில் மிகுந்து காண்போர்க்கு செவியின்பம், காட்சியின்பம், பரிச இன்பத்தையும் பகிர்ந்தளிக்கும் இந்நகரை சூரியகுலத்தோன்றலான சிபியும், அவன் வழி வந்த சோழ மரபினரும், பின்னர் பல்லவ அரசர்களும் விரும்பி இங்குப் போந்து இங்குக் கோயில் கொண்டு வீற்றிருக்கும் திருமாலுக்குக் கோயில் எடுத்து, நீண்ட வீதிகளையும், மாளிகைகளையும் கட்டினர். இவ்வூரிறைவனது திருப்பெயர் ஸ்ரீ நாதன் என்பதாம்; இத்தலச்சிறப்பை பவிஷ்யோத்தர புராணம் 3வது அத்யாயங்களால் பரக்கப் பேசுகின்றது. இத்தலம் தக்ஷிண ஜகந்நாதமென்றும், சம்பகாரண்யமென்றும் அழைக்கப்படுகிறது.

## தம்பு ப. கிருஷ்ணஸ்வாமி
**கொட்டையூர்.**

இங்கு ஆரம்பமாகும் சண்பகக்காடு மன்னார்குடி வரையில் பரந்திருந்தது. சண்பகமும், வில்வமும் இவ்வூர்த் தலவிருக்ஷங்கள். இத்தலத்தில் தவமியற்றி, அகத்தியரும், அதிகார நந்தியும், சிபியரசனும்,மார்க்கண்டேயரும் பேறு பெற்றனர். திருமாலுடன் ஊடல் கொண்டு பிரிந்த லக்ஷ்மி அவனை அடைதற் பொருட்டு இத்தலத்தில் நந்தி புஷ்கரணிக்கரையில் ஒரு சம்பக மரத்தடியில் கிழக்கு நோக்கி வீற்றிருந்து தவம் இயற்றினள்; நாராயணன் அவள் முன் தோன்றி, அவளை அங்கீகரித்துத் தன் திருமார்பில் ஏற்றுக் கொண்டான். தவமியற்றிய நாச்சியார் கிழக்கு முகமாகவும் அருள்வரதனை நாதன் எம்பெருமான் வீற்றிருந்த திருக்கோலத்தில் மேற்கு முகமாகவும் காட்சி தருகின்றனர்; நாச்சியார் திருப்பெயர் சம்பகவல்லி;

இவள் வரம்தரும் அருளுடை அன்னை. திருக்குளத்தில் நீராடி ஒரு மண்டலம் கோயிலை வலம் வந்து பாயஸம் படைத்து பூசிப்போர்க்கு எல்லாப் பொருளுடன் மக்கட் செல்வத்தையும் அளிக்கின்றாள். இஃது இத்தலத்தோர் இன்றும் கண்டு வரும் அநுபவம். அம்ருதமதனத்தில் தோன்றிய லக்ஷ்மி, இறைவனிடம் அபசாரப்பட்டுப் பிரிந்து, இத்தலத்தில் தவம் புரிந்து மீண்டும் இறைவனையடைந்து அவனது திருமார்பினை அலங்கரித்தாள். ஆகையினால் இத்தலம் ஸ்ரீநிவாஸ க்ஷேத்ரம் என்றும், இறைவன் ஆதி ஸ்ரீநிவாஸன் என்றும் அழைக்கப்படுகிறார். சிபியினாலே பிரதிஷ்டாபிதமானது இக்கோயில். சூரிய குலத்தின் குலாராதனம். சூரிய குலத்தின் அணித்தோன்றலாய தயரதன், தன் குறை தீரத் தன் குல தெய்வமான இந்த நாதனையே வழிபட்டு பேறு பெற்றான் போலும். ஸ்ரீராம பிரானாய் திருவவதாரம் செய்து அருளினான். ராமபிரானது திருவவதாரத்தைப் பேசுகின்ற ரிஷி "ப்ரோத்யமானே ஜகந்நாதம் ஸர்வ லோக நமஸ் க்ருதம்" என்று பாசுரமிட்டுள்ளதையும் நினைந்து இஃது இன்புறத்தகும். ஆழ்வாரும் "தம்பியொடு தாமொருவர் தன் துணைவி காதல் துணையாக முனநாள் வெம்பியெரி கானகம் உலாவுமவர் தாம் இனிது மேவு நகர் தான்" என்று கானகமெலாம் முன்னம் நடந்து, திரிந்த களைப்புத்தீர ஸ்ரீராமபிரான் தங்கள் மூதாதையர்களின் தலமான இங்கு வந்து அமர்ந்துளன் போலும் என்கிறார். இது ராமபிரானது தந்தையருக்கும் முந்தையருக்கும் முந்தையர்கள் விரும்பிக் கட்டிய நகரல்லவா இது! அவர்கள் கட்டுவதெல்லாம் ஈராறிடைப்பட்ட இடத்திலல்லவா! ஆகையினால் ஆராமஞ்சூழ்ந்த ஓரங்கமான இவ்விடத்தை உகந்து அவன் இங்கு வந்தமர்ந்தது ஓர் ஆச்சரியமன்று. (ஈராறிடைப்பட்ட தீவு அரங்கமெனப்படும். இதனை ஆங்கிலத்தில் Doab - தோஆப் என்பர்).

**ஆழ்வாரை ஆட்கொண்டான் :**

திருவரங்கத் திருப்பதியில் அரங்க நாதனைப் பாடி, வழிபட்டிருந்த ஆழ்வார் வடதிருக்காவேரிக் கரையினின்றும், கிழக்கே வானத்தில் வெகு தூரத்தில் ஓர் சோதிப் பிழம்பினைக் கண்டார். அஃது அவர் மனதைக் கவர்ந்தது. அதனைக் கண்டறிய வேணும் என்ற அவாவினால் உந்தப்பட்டுத் திருப்பேர்நகர் வழியாய், அச்சோதியே வழிகாட்ட, நடந்து வந்து நந்திபுர விண்ணகரம் வந்தடைந்தார். சோதிகாட்டி ஆழ்வாரைத் தன்பால் அழைத்துக் கொண்டு அவரால் தன்னைப் பாடுவித்துக் கொண்டான். இத்தலப்பதிகம் ஓசை நயம் மிக்கது. படிப்போர் மனதை ஈர்க்க வல்லது.

**உரைநயம் காண்மின் :**

உரைகொள் புகராழி சங்கமவை அங்கையுடையான் என்று இத்தல எம்பிரானை அனுபவிக்கிறார் ஆழ்வார். இறைவனுடைய திருவாழி ஒளி மிக்கது. ஆயிரமாயிரம் ஒளி ஆரங்கள் ஜாஜ்வல்யமாக விளங்குவது. இதனைக் காண்டல் இன்பம். சுடர் விட்டு பிரகாசிக்கும் காண இனியனை இவனை உரையிலிடுவாருண்டோ? ஒளி படைத்த பயன்தான் என்ன? இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை என்ற உரை மன்னர் சுவைபட அருளிச்செய்யும் பொருள் நயத்தினை உரைதனில் காண்க. பரகாலனை ஆழ்வாரது வாளும், வேலும் விரோதி நிரஸனுக்கு ஏற்பட்ட பிறகு ஓய்வு பெற்ற சக்கரத்தாழ்வாரை உபயோகமில்லாமல் உரையிலிட்டபடி.

**கருவறைக் காட்சி :**

இத்தலத் திருக்கோயில் மேற்கு பார்த்தது. அடக்கமான ராஜகோபுரம். எடுப்பாக நிவந்தெழுந்த விமானம், நல்ல நேர்த்தியான சுதைச் சிற்பங்கள் நிறைந்தது. மந்தார விமானம் என்று அழைக்கப்படுவது. கோபுரத்தின் வழியே நுழைந்ததும், ஓங்கி நிற்கும் கொடிமரமும், பலி பீடமும் காணப்படுகின்றன. முன் கருடாழ்வாரது ஸன்னதியையும், முகப்பு மண்டபத்தையும் கடந்து, படிக்கட்டிலேறி மஹா மண்டபத்தையும் அடைகிறோம். த்வாரக பாலகர்களை ஸேவித்து அனுமதி கொண்டு அர்த்த மண்டபம் அடைகிறோம். கருவறையில் நாம் காண்பது கண்கொள்ளாக் காட்சி. பளபளவென்று நீலநிற வண்ணனாய் சதுர்புஜனாய் ஸ்ரீ பூமி ஸமேதனாய் ஸிம்ஹாசனத்தில் இனிது வீற்றிருக்கும் நாதன் எம்பெருமானைக் காணக் கண் கோடி வேண்டும்; அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கையுறைகின்ற மார்வகலமும், தோளிலே சாத்திய திருவாழ்வார்களும் அஞ்சலென்ற கர்தாமும், கவித்த திருமுடியும் முகமும், முறுவலுமாய் பெரிய திருமேனியுடன் மூலவர் காட்சியளிக்கின்றார். பெருமாளுக்கு வலப்புறத்தில் வடக்குச்சுவரில் பிரும்மதேவனும் இடப்புறத்துத் தென்சுவரில் அஞ்சலி ஹஸ்தனாய் மான் மழுவேந்திய கைகளு

(40 ம் பக்கம் பார்க்க)

## விண்ணப்பம்

ஸப்தகிரிக்கு கதை கட்டுரைகளை அனுப்பும் ஆசிரியர்கள் அவற்றின்பின் தங்கள் முழு முகவரியினை ஆங்கிலத்தில் எழுதவும். பிரசுரிக்கப்படும் துணுக்குகளுக்குச் சன்மானத் தொகை வழங்கப்படமாட்டா. சம்பந்தப்பட்டவர்களுக்கு ஓர் இதழ் மட்டுமே அனுப்பப்படும். இந்து சமய விழாக்கள் பற்றிய கதை கட்டுரைகளை இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பாகவே அனுப்பினால், தகுந்த தேர்வுக்குப் பின்னர் அவை அவ்வவ் மாதங்களில் பிரசுரிக்க உதவியாக அமையும்.

# ★ கீதை காட்டும் நல்வழி ★

### சிரத்தாத்ரய விபாக யோகம்
### அத்தியாயம்—17.
### பகுதி—2.

சிரத்தை அல்லது நம்பிக்கை மூவகைப்படும். இதில் முதல் வகையைப் பற்றிய விளக்கம் கீழ்க் காணும் சுலோகத்தில் வருகிறது.

ஸத்வாநுரூபா ஸர்வஸ்ய
ச்ரத்தா பவதி பாரத|
ச்ரத்தா மயோSயம் புருஷோ
யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ:|(17-3)

'பாரதா! ஒவ்வொருவனுடைய மனப்பாங்கிற்கேற்ப சிரத்தை அமைகிறது. மனிதன் சிரத்தைமயமானவன். சிரத்தை எதுவோ அதுவே அவனுமாகிறான்!'

மனிதனது முன்னேற்றம் எதைப் பொறுத்து அமைகிறது? அவனது உள்ளத்தின் தன்மையைப் பொறுத்து என்கிறது திருக்குறள்.

வெள்ளத் தனைய மலர்நீட்டம்
மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு.

இந்தக் கீதா சுலோகம் ஏறக்குறைய மேற்காணும் குறளின் கருத்தைப் பிரதிபலிக்கிறது. ஒருவனது சிரத்தைக்கேற்ப அவனது வாழ்க்கை அமைகிறது. சிரத்தை என்னும் சமஸ்கிருதச் சொல் ஆழ்ந்த பொருளுடையது. விழிப்புணர்வு, மன எழுச்சி, துரிதமாகச் செயலாற்றுதல், வினையாற்றுதலில் உள்ள மகிழ்ச்சி அனைத்தும் சேர்ந்து சிரத்தை ஆகிறது: விண்ணை நோக்கி வீசப்பட்ட கல் அது எறியப்பட்ட வேகத்துக்கேற்ப மேலே போகிறது.

இரண்டாவது சுலோகத்தில் உள்ள 'ஸ்வபாவ' என்ற பதமும் இந்த சுலோகத்தில் உள்ள 'ஸத்வ' என்ற சொல்லும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. மனிதன் எதை நம்புகிறானோ அதுவாக ஆகிறான். உலகில் பலர் பலவற்றை நம்புவதைக் காணலாம். அவரவர் நம்பிக்கை அவரவர் சுவபாவத்தைப் பொறுத்து அமைகிறது. ஒவ்வொருவரும் அடிப்படையில் ஆன்மமயமே. ஆன்மா தூய நம்பிக்கைமயமானது. அது மனத்தின் மூலம் வெளிப்படுகையில் மனத்தின் தன்மையை அடைகிறது. நிறமற்ற வெள்ளை ஒளியை பிரிசம் வழியாகச் செலுத்தினால் அது ஏழு நிறங்களாகப் பிரிகிறது. உருவற்ற நீர் அது விடப்படும் கொள்கலத்தின் உருவத்தைப் பெறுகிறது. அது போல தூய ஆத்மனின் சிரத்தை எந்தக் குணமும் அற்றது; ஆனால் அந்த சிரத்தை மனத்தின் மூலம் செயல்படுகையில் ஸத்வ, ரஜஸ், தமஸ் என்னும் வகைகளாகப் பிரிகிறது.

இதை விளக்க உடற்கூறு சாஸ்திரத்தில் ஓர் உதாரணத்தை நினைவு கூறலாம். பிறக்கப் போகும் குழந்தை ஆணா? அல்லது பெண்ணா? எப்படிச் சொல்வது? இதற்கு விஞ்ஞானிகள் கீழ்க்கண்டவாறு விடை தருகிறார்கள் ''ஆண், பெண் என்ற இனப்பாகுபாடு குரோமோஸோம்களைப் பொறுத்திருக்கிறது. தந்தையிடம் இருக்கும் குரோமோஸோம்கள் $xy$ என்றால் தாயிடம் உள்ளவை $xx$ ஆகும். தாய் குழந்தை உருவாக $x$ குரோமோஸோம்களை மட்டுமே தர முடியும். ஆனால் தந்தையோ $x$ அல்லது $y$ குரோமோஸோம்களைத் தர முடியும். தந்தை தருவது $x$ குரோமோஸோம் என்றால் பிறக்கப்போவது பெண் குழந்தையாயும் $y$ ஆக இருந்தால் பிறக்கப்போவது ஆண் குழந்தையாகவும் அமையும். குழந்தை தந்தையைப் போல தோற்றமளிக்குமா? அல்லது தாயைப் போல தோற்றமளிக்குமா? குழந்தையின் செல்லை உருவாக்கத் தேவைப்படும் இருபத்து மூன்று குரோமோஸோம் இரட்டைகளிலே, ஒவ்வொரு இரட்டையிலும் தாயினுடையது ஒன்றும் தந்தையினுடையது ஒன்றும் இருக்கும். தந்தையின் குரோமோஸோம்கள் மிகுந்து இருப்பின் குழந்தை தந்தையைப் போலவும், தாயினுடையவை மிகுந்து இருப்பின் அது தாயைப் போலவும் இருக்கும்.

திரு. டி. கே. நாராயணன்,
M.S.c., M.Phil.,
ஆசிரியர் ''சமயஜோதி'' மதுரை.

இதைப் போலவே மனத்தின் தன்மையைப் பொறுத்து சிரத்தை அல்லது நம்பிக்கை அமைகிறது. சிரத்தை என்பது வெறும் அறிவுப்பூர்வமான ஒன்றை அங்கீகரிப்பதோ அல்லது குருட்டுத்தனமாக ஒன்றை ஏற்றுக்கொள்வது மட்டுமோ ஆகாது. சிரத்தையானது நம் வாழ்வில் பல விதத்தில் வெளிப்படுகிறது. அவற்றில் வழிபாடு ஒன்றாகும். அதைப் பற்றிய விளக்கம் கீழே வருகிறது :

யஜந்தே ஸாத்விகா தேவான்
யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா:|
ப்ரேதான் பூதகணாம்ஸ்சான்யே
யஜந்தே தாமஸா ஜனா:|| (17-4)

'ஸாத்விகர்கள் தேவர்களை வழிபடுகிறார்கள். ரஜோ குணமுடையவர்கள் யக்ஷராக்ஷஸர்களையும், மற்ற தாமஸ குணமுடையவர்கள் ப்ரேத, பூதகணங்களையும் வணங்குகிறார்கள்'

ஆங்கிலத்தில் ஒரு பிரபலமான பழமொழி உண்டு. "Tell me your friend, I will tell you"-'உன் நண்பனைப் பற்றிச் சொல், நான் உன்னைப் பற்றிக் கூறுகிறேன்'. இனம் இனத்தோடுதான் சேரும். அறிவாளி அறிவாளியோடும், குடிகாரன் குடிகாரனோடும்தான் இணக்கம் வைப்பார்கள். காரணம் ஒருவன் மற்றவனோடு இணக்கம் கொள்வது அவரவர் சுவபாவத்துக்கேற்பவே யாகும். நல்லவர் நல்லவரை நாடுவர். கெட்டவர் கெட்டவரை நாடுவர். மக்களின் வழிபாடும் இந்த முறையில் அமைகிறது. நாம் செய்யும் தேவ ஆராதனை அல்லது வழிபாடு நாம் பெற்று விளங்கும் ஸாத்விக, ராஜஸிக, அல்லது தாமஸிக குணத்தைப் பொறுத்தே அமைகிறது.

ஸாத்விக குணத்துடன் கூடியவர்கள் கூரிய அறிவும், தக்கது இன்னது, தகாதது இன்னது என்று பிரித்துணரும் பாங்கும், ஆன்மிக நாட்டமும் பெற்று விளங்குவர். இவர்கள் மகான்களையும், சான்றோரையும் நாடுவர். இவர்கள் தங்களது குணத்திற்கேற்ப சிவன், விஷ்ணு, முருகன் போன்ற தெய்வங்களை வழிபடுவார்கள். இவர்கள் மேல்நிலைக்குப் போவதற்கேற்ப சகுண வழிபாடு நிர்குண வழிபாடாகவும் அமையும். யோகத்திலும் தியானத்திலும் இவர்களது நாட்டம் செல்லும்.

மாறாக தாமஸ குணம் மிக்கவர்களிடம் அறிவு நாட்டம் இருக்காது. ஆனால் அவர்கள் தங்கள் உடல் பலத்தை நம்பியிருப்பர். எனவே இத்தகையவர்கள் தங்களது பெரும்பாலான நேரத்தை உடல் வலிமையை அபிவிருத்தி செய்வதிலும், உடலை அழகுபடுத்துவதிலும் செலவிடுவர்.

ஒவ்வொரு மனிதனும் தனது சுவபாவத்திற்கேற்பவே தனது வழிபாடு தெய்வத்தையும் தேர்ந்தெடுக்கிறான். நம்மைச் சுற்றிலும் கொஞ்சம் கவனித்தாலே இந்த உண்மையைக் காண முடியும்; விஷ்ணு, சிவன், ஐயப்பன், முருகன் என்ற தெய்வங்களை வழிபடுவோர் நம்மிடையே பலர் உண்டு. பலப்பல பெயர்களில் மாரியம்மனைத் தங்களுக்கே உரித்தான முறையில் வழிபடுபவர்களும் அநேகர் உண்டு. இவை தவிர சிறு சிறு கிராம தேவதைகளை ஆடு, கோழி, போன்றவற்றைப் பலி கொடுத்து வழிபடும் மக்களும் நம்மிடையே உண்டு. வகை வகையான பெயருடன் தெய்வங்கள், விதவிதமான உருவங்கள் அத்தனையையும் நம் ஹிந்து மதத்தில் காணலாம். அமைதியான முறையில் ஆர்ப்பாட்டம் எதுவுமின்றி வழிபடுவது ஒருவகை. இத்தகைய மக்கள் சத்வ குணம் பொருந்தியவர்கள். இவர்கள் சாந்த குணம் மிக்க சாத்விக தெய்வங்களை வணங்குவார்கள். ஞான வேட்கை மிக்கவர்கள் இவர்கள்.

ராஜஸிக குணம் மிக்கவர்கள் பெரும்பாலும் பொருள் வேண்டும், சொத்து வேண்டும் என்ற ஆசை மிக்கவர்களாய் யக்ஷர்களையும், ராக்ஷசர்களையும் வழிபடுகிறார்கள். தங்களுக்குப் பிடித்தமான மது, மாமிசம் போன்றவற்றைத் தங்கள் தெய்வங்களுக்குப் படைத்து இத்தகையவர்கள் தங்கள் ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்கிறார்கள். சோம்பலும் அறியாமையும் தமோ குணத்தின் இயல்புகள். எனவே தமோ குணம் மிக்கவர்கள் கொடூரமான வன தேவதைகளையும், இறந்தவர்களது ஆவிகளையும் உயிர்ப்பலி கொடுத்து கொடூரமான முறையில் வழிபடுகிறார்கள்.

பொதுவாக இன்றும் கூட நாம் கிராமப் பகுதிகளில் உயிர்ப்பலியுடன் கூடிய வழிபாடுகள் நிகழக் காண்கிறோம். அதெல்லாம் வழிபாட்டின் மிகக் கீழான தாமஸ வழிபாடேயாகும். எந்த தெய்வமும் உயிர்ப்பலியைக் கேட்காது.

வழிபாட்டில் சிறந்தது சாத்விக வழிபாடுதான். உடலை வருத்தாது, ஆத்மார்த்தமாக மனத் தூய்மைக்காகவும், பிறர் நலத்திற்காகவும் செய்யப்படுகின்ற வழிபாடே அனைத்திலும் சிறந்ததாகும்.

மக்களில் பெரும்பான்மையோரது போக்கு எத்தகையது என்பதற்குப் பதில் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

**(தொடரும்)**

# கோலமிடும் பெண்களே...

* வீட்டு வாசலில் சூர்யோதயத்துக்குமுன் கூட்டி, சாணம் இட்டுக் கோலமிடுங்கள்.
* கணவன் வெளியே செல்லுமுன் இதனைச் செய்யவும்.
* சுபகாரியங்களுக்கு இரட்டை இழைக் கோலமும், அசுப காரியங்களுக்கு ஒரு இழைக் கோலமும் போடவும்.
* வேலையாட்களைக் கொண்டு கோலமிடுதல் ஆகாது.
* திவச நாட்களில் கோலமிடுதல் கூடாது; அன்று மாலை வாசலில் கோலமிடலாம்.
* கோலமிடுவதால் அந்த வீட்டை நெருங்க, மூதேவி அஞ்சுவாள்.
* முத்துப்போல கோலமிட்ட இல்லத்தை, திருமகள் விரும்பி அடைவாள்.

நடாதூர் வி. திருமகள்—பாண்டிச்சேரி-3.

# திருமலையும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறியும்

பாரத்துவாசன்

முதலாழ்வார்களின் பாசுரத்தைத் திருவேங்கடமுடையான் மிக விரும்பிக் கேட்டாரென்பதை ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் வாயிலாக அறிந்த எம்பெருமானார்— 'செந்தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவர்' என்ற கலியனருளிச்செயல் துணுக்கைக்கு முதலாழ்வார்கள் வணங்கும் திருவேங்கடமுடையான் என்னும் பொருளைப் பெரிய பெருமாளுடைய சிஷ்ய ஸம்ப்ரதாயத்தில் கேட்டிருந்தற்கு அரையர் கூறியதை ஸம்வாதமாக நினைத்தருளி, நாதமுனிகளின் திருவம்சயரான ஓர் அரையரை (ஸ்ரீரங்கத்தில் இருந்தவரை) அழைத்து மலை குனியநின்ரு ரரையரென்று திருநாமம் சாத்தி, திருமலைக்குச் சென்று அத்யயனோத்ஸவத்தில் முதன்முதலாக இயற்பாவை அனுஸந்தித்துப் பின்பு முதலாயிரம் பெரிய திருமொழிகளை அநுஸந்தித்துத் திருவாய்மொழி சாத்திய மறுநாள்,- அனந்தாழ்வான் நாள்தோறும் புஷ்ப கைங்கர்யம் செய்துகொண்டும் ஆழ்வார்கள் திவ்ய ஸூக்திகளை ப்ரவசனம் செய்துகொண்டும் மதுரகவிகளைப் போல் சரம பர்வ நிஷ்டராய் எப்போதும் கண்ணிநுண் சிறுத்தாம்பை அநுஸந்தித்துக் கொண்டிருக்கிறவராய் மதுரகவிதாஸரென்று திருநாமம் பெறுகையாலே அவருகந்த—கண்ணிநுண் சிறுத்தாம்பை ஸந்நிதியில் பெருமாள் திருமுன்பு தனியாக அநுஸந்திக்கும்படி நியமித்து அவரைத் திருமலைக்கனுப்பியருளினார். அரையர் திருமலைக்கெழுந்தருளித் திருமலைநம்பி அனந்தாழ்வான் ஆகியவர்களோடு ஸந்நிதிக்குச் செல்ல, அனந்தாழ்வான் உடையவர் நியமனத்தைப் பெருமாளுக்கு விண்ணப்பிக்கத் திருமலையப்பனும் நம்மிராமாநுசன் நியமனத்தைப் பரிபாலனம் பண்ணுகிறோம் என்று உகப்புடன் அருளிச் செய்து அப்படியே நடத்தும்படி அனந்தாழ்வானுக்குக் கட்டளை பண்ணினான். அதுமுதல் இது வரையில் அப்படியே நடந்து வருகிறது. ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் கங்குலும் பகலும் திருவாய்மொழியையும் சிறிய திருமடலையும் தேவகானத்திலே ஏறிட்டுப் பாடத் திருமலையப்பன் மிகவுமுகந்தானென்பதைக் கேட்ட எம்பெருமானார் பகலில் திருமாலை சாத்தும்போது சிறிய திருமடலையும் மாலையில் நித்யாநுஸந்தானத்தில் கங்குலும் பகலும் பதிகத்தையும் அநுஸந்திக்கும்படி நியமித்தார். (சிறிய திருமடல் இப்போது வெள்ளிக்கிழமையில் மட்டுமே அநுஸந்தானத்தில் உள்ளது). வெள்ளிக்கிழமைகளில் மூலவருக்குத் திருமஞ்சனமானவுடன் திருமார்பிலுள்ள பிராட்டியை இறக்கித் திருமஞ்சனம் கண்டருளச் செய்யும்போது, பிராட்டியின் பிரிவைப் பொறுக்கமாட்டாத திருவேங்கடமுடையானுடைய விச்லேஷவ்யஸனத்தை ஒருவாறு பரிஹரிக்க நினைத்த எம்பெருமானார், பிராட்டியின் அபராவதாரமாய் பூதேவியின் அம்சமான ஆண்டாள் பெருமாளைப் பிரிந்து ஆற்றாமையில் அநுஸந்தித்த நாச்சியார் திருமொழியைத் திருவேங்கடமுடையான் கேட்டுத் தரிக்கட்டுமென்று நினைத்து நாச்சியார் திருமொழியை அப்போது அநுஸிந்திக்குமாறு ஆணையிட்டார். காசிராஜாவின் மனைவியினுடைய கனவில் திருவேங்கடமுடையான் தோன்ற, அவள் ஸந்தானம் வேண்டுமென்று அபேக்ஷிக்க, உன் நாஸாமணியை (மூக்குத்திருகு அல்லது புலாக்கு) எனக்குத் தந்தால் நான் உனக்கு ஸந்தானம் அருளுகிறேனென்று பெருமாள் அருளிச் செய்ய, என் கணவரின் ஸம்மதி வேணுமே என்று அவள் கூற, அப்படியானால் உனக்கு நான் பிள்ளைப்பேறு அருளுவதற்கும் என் அண்ணரான கோவிந்தராஜன் அநுமதி வேணுமென்று வேங்கடவன் அருளிச் செய்தான் என்ற ஐதிஹ்யத்தைக் கேட்டிருந்ததனாலும், திருவேங்கடமுடையானும் கோவிந்தராஜனும் ஸ்ரீவைகாநஸாகமத்தில் ஒரே ஸம்ஹிதையில் கூறியபடியே நித்யாராதன மகோத்ஸவாதிகள் கண்டருளுகையாலும் எம்பெருமானார் இவ்விருவரையும் ஒரு கோவிலிலுள்ள பஞ்ச பேரங்கள் போல் ஐக்யமுடையவர்களாக நினைத்தருளி, திருவேங்கடமுடையான் மாலையில் நித்யாநுஸந்தானம் கேட்டருளும்போது கோவிந்தராஜனுடைய ஊன்வாட, வாடமருதிடை என்ற இரு திருமொழிகளையும் கேட்டருளும்படியாகவும், கோவிந்தராஜன் மாலையில் நித்யாநுஸந்தானம் கேட்டருளும்போது ஒழிவில் காலம், உலகமுண்ட என்ற இரண்டு திருவாய்மொழிகளையும் கேட்டருளும்படியாகவும் நியமனம் செய்தருளினார். த்வஜாரோஹணத்தன்று மாலையில் யாகசாலையில் கலசங்களிலே தேவதாவாஹநம் பண்ணி ஆராதனத்தைச் செய்த பிறகு வேத பாராயணம் தொடங்குவது ப்ரமாணஸித்தமாகையாலே தத்ஸமமான த்ராவிட வேதத்துக்கும் தொடக்கம் அப்படியே செய்வது உசிதமாகையாலே இரவுப் புறப்பாட்டில் இயல் தொடங்க வேண்டுமென்றும் காலைப் புறப்பாட்டில் வேண்டாமென்றும் எம்பெருமானார் நியமித்தார். பராங்குச நாயகிக்கும்

எம்பெருமானுக்கும் நடந்ததாக மின்னிடைமடவார் பதிகத்தில் உள்ள ப்ரணய கலஹத்தை, 'பின்னை கொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்' என்று திருத் தாயார் பராங்குச நாயகியைப் பிராட்டிமாராகவே சங்கிக்கையால் உபயநாச்சியார்க்கும் பெருமாளுக் கும் நடப்பதாக இரண்டு பக்கங்களி லும் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் புராணம் வாசிக்கச் செய்து, ஒரு உத்ஸவமாக (அத்யயனோத்ஸவ'ம் இராப்பத்து ஆரும் நாள் மாலையில்) நடத்தி வைத்தார்.

### திருமலையனந்தாழ்வான்

மேல்நாட்டில் சிறுப்புத்தூரில் அவதரித்த அனந்தாழ்வான், ஆழ் வான் ஆண்டான் அருளாளப் பெரு மாளெம்பெருமானுர் முதலிய சிஷ் யர்களால் ஆச்ரயிக்கப் பெற்ற எம் பெருமானுர் திருவடிகளில் ஆச்ரயிப் பதற்காகக் கோயிலுக்கு வர, அவரை எம்பெருமானுர் அருளா ளப் பெருமாளெம்பெருமானுர் திருவடிகளிலே ஆச்ரயிப்பிக் தருளினுர். ஆரம்பமே பிடித்து ஆசார்யபாரதந்த்ரியத்தை விரும்பிய அனந்தாழ்வான் மிகவும் உகந் திருக்க, அருளாளப்பெருமாளெம் பெருமானுர் அனந்தாழ்வானிடம் 'குருவியின் கழுத்திலே பனங் காயைக் கட்டினுற் போலே உடைய வர் செய்தார், நீர் எம்பெருமானுர் திருவடிகளே தஞ்சமென்றிரும், என் றருளிச் செய்தார். பின்பு உடைய வரிடம் திருவாய்மொழிக்கு அர்த் தம் கேட்டுக் கொண்டிருக்கும்போது ஒழிவில் காலம் நடவாநிற்க 'சிந்து பூ மகிழும் திருவேங்கடம்' என்ற இடம் ப்ரஸ்துதமாக, புஷ்ப மண்டப மான பெரிய திருமலையிலே திரு வேங்கடமுடையானுக்கு உகப்பாகத் திருநந்தவனம் செய்து திருமாலை கட்டிச் சாத்துவார் இக்கோஷ்டியில் ஆரேனும் உண்டோ? என்று உடைய வர் கேட்டருள, அனந்தாழ்வான் எழுந்திருந்து அடியேன் விடை கொள்ளுகிறேனென்று விண்ணப் பித்து ஆசார்ய பரதந்த்ரராய் உடனே திருமலைக்கு எழுந்தருளிப பெருமானை ஸேவித்துத் திருநந்த வனம் அமைத்து, முன்பு ஆளவந் தார் குடில் கட்டிக் கொண்டெழுந் தருளியிருந்த இடத்தில் யமுனைத் துறைவர் என்ற பெயரையுடைய ஓர் மண்டபத்தையும் உடையவருத் தரவின்படி ஏற்படுத்தித் தோட்டத் தில் மலரும் மலர்களை அம்மண்டபத் திற்குக் கொண்டு வந்து மாலையாகக் கட்டித் திருவேங்கடமுடையானுக்கு ஸமர்ப்பித்து வந்தார். உடையவர் திருவாய்மொழி காலக்ஷேபத்தை முடித்துச் சாத்துமுறை செய்து விட் டுப் பெரிய பெருமாளிடம் அநுமதி பெற்றுத் திருமலைக்கெழுந்தருளித் திருவேங்கடமுடையானைத் திருவடி தொழுது தோட்டத்திற்கு எழுந்தரு ளிக் கடாக்ஷித்து 'வளர்த்தனுல் பயன் பெற்றேன்' என்று கூறி அனந்தாழ்வானை அணைத்துக் கொண் டார். அனந்தாழ்வான் திருமலை யில் ஏரி வெட்டும்போது கர்ப்பவதி யான தம் தேவிகளைக் கொண்டு மண் சுமத்தா நிற்க, இதைக் கண்ட திரு வேங்கடமுடையான் ஒரு ப்ரஹ்ம சாரியுருவில் சென்று அவளிட மிருந்து நிர்ப்பந்தமாக மண் கூடையை வாங்கிக்கொண்டு சென்று மண்ணை வேறொரிடத்தில் சேர்த்து வருவதைக் கண்டு, அனந் தாழ்வான் நான் செய்யும் கைங்கர் யத்திற்குத் தடை செய்யாதே, கூடையைத் தொடாதே என்று மிரட்டியும் கேளாது மண்கூடையை வாங்கிக்கொண்டு செல்லும் ப்ரஹ்ம சாரியைத் துரத்திச் சென்று கடப் பாரையினுல் அவரை யடித்தார். மோவாயில் பலமாக அடிபட்ட திரு வேங்கடவன் கோயிலுக்குள் புகுந்து கொண்டு, பின்பு அனந்தாழ்வானுல் அபசாரக்ஷாமணம் வேண்டப் பெற் ருன். அனந்தாழ்வான் அடிபட்ட இடத்தில் புஷ்ப தூளிகளை எடுத்து அழுத்தினுர். 'பக்தனுல் ஏற்படுத் தப்பட்ட இந்த இடத்திற்குத் தினந் தோறும் பச்சைக் கருப்பூரப் பொடியை அழுத்தி, நான் பக்தன அடித்தாலும் மகிழ்ச்சியோடு ஏற் றுக்கொள்பவனென்பதை உலகறி யச் செய்யுங்கோள்' என்று அர்ச்ச கர்களுக்குத் திருமலையப்பன் ஆணை யிட்டருளினுன். அடித்த கடப் பாரை பெருமாளுத்தரவின்படி பெரிய கோபுர வாசலுக்குள் வடக் குப் பக்கத்தில் தொங்கவிடப்பட்டி ருக்கிறது. இன்றும் காணலாம். அனந்தாழ்வான் தோட்டத்தில் புஷ்

## பெண்கள் செய்யக் கூடாதவை?

* நிலத்தைக் கால் விரலால் கீறக் கூடாது.
* வாயிற்படிக்கு நேர் கட்டிலிட்டோ, தரையிலோ படுக்கக் கூடாது.
* நீரில் தன் நிழலைப் பார்ப்பது கூடாது.
* எண்ணெய் தேய்த்துக் கொண்டதும் தலைவிரிகோலமாயிருப்பது கூடாது.
* தலையில் எண்ணெய் வைத்திருக்கும்போது யாரையும் வழி யனுப்பவோ, எதையும் சாப்பிடவோ கூடாது.
* தலையில் தேய்த்த எண்ணெயை உடலுக்கு தடவுதல் கூடாது.
* குளித்த அன்று பகல் தூக்கம் கூடாது.
* சனி, திங்கள், துவாதசியில் எண்ணெய் ஸ்நானம் கூடாது.

நடாதூர் வி: திருமகள் —பாண்டிச்சேரி-3.

பம் பறியா நிற்கத் திருக்கையில் அரவம் தீண்டப் பின்பு போய் நீரா டிப் புஷ்பம் பறித்தார். விஷம் தீர்க்க உபாயமேதும் செய்யவில்லை என்பதனையறிந்த திருவேங்கட முடையான் விஷந்தீர்க்க வேண் டாவோ என்று கேட்டருள, ஸ்வாமீ, கடியுண்ட பாம்பு வலிதா கில் திருக்கோனேரியில் நீராடித் தேவரீருக்குத் தொண்டு செய்கி றேன். கடித்த பாம்பு வலிதாகில் விரஜையில் தீர்த்தமாடி ஸ்ரீவை குண்ட நாதனுக்குக் கைங்கர்யம் செய்கிறேன் என்று கூறி, உடைய வர் திருவருளால் தமக்கேதும் அபா யம் நேராதென்பதனை வெளியிட்டரு ளினர். ஒரு நாள் அனந்தாழ்வான் யமுனைத்துறைவர் மண்டபத்தில் திரு மாலை கட்டா நிற்க, திருவேங்கட முடையான் அழைத்தருள, அப்பொ ழுது செல்லாமல் திருமாலை கட்டி முடித்து எடுத்துக்கொண்டு செல்ல, நான் அழைத்தபோது நீர் ஏன் வர வில்லை என்று பெருமாள் கேட்ட ருள, புஷ்பம் மலருவதற்குள்ளே மாலை கட்டவேணும் என்று உடைய வருத்தரவிருக்க, தேவரீரால் எனக் கென்ன காரியம் என்ன, பெருமாள் நான் உம்மை இங்கிருந்து போகச் சொன்னால் நீர் செய்வீரென்ன, அனந்தாழவான் 'பரன் சென்று (=வந்து) சேர் திருவேங்கடம்' என் கிறபடியே தேவரீர் வந்தேறிகள். இந்த இடம் தேவரீரை ஆச்ரயித்த வர்களதன்றோ? என்று கூறத் திரு வேங்கடமுடையான் உகந்தருளி னன். எம்பெருமானாருடைய அவ தார ஸமாப்தியைக் கேட்ட அனந் தாழ்வான் திருவேங்கடமுடையா னோடு முசித்து ஒரு வருஷ காலம் திருநந்தவன கைங்கர்யத்தையும் உபேக்ஷித்திருக்கத் திருவேங்கட முடையான் அனந்தாழ்வானை அழைப்பித்து, உமக்கென்ன வேண் டும், நாமே தலைக்கட்டுகிறோம் என்ற பின்பு, ஒரு காலத்தில் தேவ ரீர் விட்டருளிய திருவாழி திருச்சங் குகளைத் தேவரீர்க்கு அளித்தும் பாஹ்ய குத்ருஷ்டிகள் மண்ணுண்ணும் படி, தேவரீரே பரதத்வமென்றும் மோக்ஷப்ரதரென்றும் நிரூபித்து ஸ்ரீ பாஷ்யம் செய்தருளியும் உபகரித்த எம்பெருமானார் விஷயமான நூற் றந்தாதியை, தேவரீர் அத்யயனோத் ஸவத்தின் முடிவில் திருச்செவி சாத்தியருளவேணும், ஏற்கெனவே உடையவரால் அடியேனுக்கு அளிக் கப்பெற்று அடியேன் திருவாராத னம் செய்து வரும் எம்பெருமானா ரின் அர்ச்சாவதாரத் திருமேனியைத் தேவரீருடைய திருமுன்பே ஸந்நிதி யில் திருப்ரதிஷ்டை கொண்டருள ஸம்மதிக்க வேணுமென்று அனந் தாழ்வான் விண்ணப்பிக்கப் பெரு மாளும் மிகவும் உகந்து ஸம்மதிக்க அவ்விரண்டையும் அனந்தாழ்வான் நிறைவேற்றி வைத்தார்.

இப்படி திருவேங்கட முடையா னுக்கு அத்யந்த ப்ரியராய் ஆசார்ய நிஷ்டராயெழுந்தருளி இருந்த அனந் தாழ்வானுக்குத் திருப்பதி கோவிந்த ராஜன் ஸந்நிதியிலுள்ள மதுரகவி ஸந்நிதியில் அவருக்குப் பக்கத்தில் அர்ச்சைத் திருமேனியைப் பெரி யோர் எழுந்தருளப் பண்ணியிருக் கிறார்கள். மதுரகவி சாத்துமுறை யன்று கோவிந்தராஜன் மதுரகவிகள் ஸந்நிதிக்கு எழுந்தருளி மதுரகவி களுடன் மதுரகவி தாஸரான அனந் தாழ்வானுக்கும் ஸகல மரியாதை களையும் செய்வித்துச் சாத்துமுறை கண்டருளுகிறார். திருமலையில் அனந் தாழ்வான் தோட்டத்தில், அனந் தாழ்வான் உடையவர் திருவடியைச் சார்ந்த பிறகு முளைத்ததோர் மகிழ மரத்தை, 'எம்பெருமான் பொன் மலைமேல் ஏதேனுமாவேனே' என் கிறபடியே திருவேங்கடமுடையான் அனந்தாழ்வானாகவே மதித்து, தீர்த்த வாரிக்கு அடுத்த தினத்தில் நடை பெறும் தோட்டவுத்ஸவத்திலும், அனந்தாழ்வான் பரமபதித்ததாகக் கருதப்படும் நாளான திருவாடிப் பூரத்தினத்தன்றும் மாலையில் தோட் டத்திற்கு எழுந்தருளி அமுது செய்து விநியோகமானவுடன் அம்மரத் திற்குப் புஷ்ப மாலையும் ஸ்ரீசடகோப னும் ஸாதித்துக் கௌரவிக்கிறார்.

**பெரிய ஜீயர் ஸ்வாமி:**

திருமலை நம்பி திருநாட்டுக்கெழுந் தருளிய பிறகு அனந்தாழ்வான் ஒரு வரால் ஸந்நிதி நிர்வாஹம் செய் வதன் அருமையை எண்ணிய எம் பெருமானார் அனந்தாழ்வானோடு ஆலோசித்து, அனந்தாழ்வானுடைய அந்தேவாஸியாய் இதற்கு முன்பே ஏகாங்கி ஸ்ரீ வைஷ்ணவராக ஸந்நிதி யின் நிர்வாஹத்திற்குத் தம்மாலேயே ஏற்படுத்தப்பட்டுள்ள ஸ்ரீஸேநாபதி ஜீயருக்கு த்ரிதண்ட காஷாயங்களைத் தந்து பூர்ண ஸந்யாஸியாக்கித் திரு மலையில் தம்முடைய மடத்தில் ஸ்தா பித்தருளினர். 'வழுவிலா வடிமை செய்ய வேண்டும் நாம்' என்று எல்லா வடிமைகளும் செய்யப் பாரித்த ஆழ்வார் வாசிகமாகவன்றிக் காயிகமாக அடிமை செய்யாத குறை தீர்ப்பதற்காக எம்பெருமானார் அந்த ஜீயருக்கு ஸ்ரீசடகோப ஜீயர் என்று திருநாமம் சூட்டி அவரிடம் திருவேங் கடமுடையானுடையவும் ஸ்ரீகோவிந் தராஜனுடையவும் ஸமஸ்தைச்வர்ய நிர்வாஹப் பொறுப்பையும் ஒப்பு வித்தருளினர். இரண்டு கோவில் சாவிகளும் இரவில் பெட்டியில் வைத்து ஸீல் வைத்து இரண்டு இடங் களிலும் இருக்கும் பெரிய ஜீயர் மடத்திற்கு அனுப்பப்பட்டு, மறுபடி காலையில் ஸந்நிதி திறப்பதற்கு முன்னே பெரிய ஜீயர் ஸ்வாமியை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு செல்லும் போது எடுத்துச் செல்லப் படுகிறது. இந்த ஜீயருக்குள்ள பெரு மைகள் சில முன்னமே விண்ணப் பிக்கப்பட்டுள்ளன.

(தொடரும்)



# நூல் மதிப்புரை

## ஸ்ரீ மஹாவீர வைபவம் (ரகுவீர கத்யம்)

தொகுத்து வெளியிட்டவர்: இடாம்பி ஆர். ராகவாச்சாரி, பி.ஏ., எல். ஐ. ஸி. ஃப்ளாட் (ஹவுஸிங் போர்டு), எண். எல் 40/6, கம்யூனிட்டி ஹால் மெயின் ரோட், கொரட்டூர், சென்னை-80; பக்கங்கள் iv+46; விலை ரூ. 1/-

பதிமூன்று பதிநான்காம் நூற்றுண்டுகளில் வாழ்ந்த மாபெரும் வடகலை வைணவாச்சாரியர், திருமலைக் கோயிலின் மணியின் திருவவதாரம் எனக் கருதப் பெறும் தூப்புல் வேதாந்த தேசிகர், இராமானுஜரின் விசிஷ்டாத்வைதக் கொள்கைகளில் ஈடுபட்டு அதன் கொள்கைகளை நிலை நிறுத்தும் பொருட்டுப் பல அரிய நூல்களை இயற்றியுள்ளார். அரசர்களையோ பிரபுக்களையோ வேறு எவரையுமோ எதற்காகவும் அணுகாது, எம்பெருமான் தாளிணையே நம்பி, எளிமையாக வாழ்ந்த மகான்:

எத்தனை தடவை படித்தாலும் தெவிட்டாத இராமனின் முழுக்கதையையும், உத்தர காண்டம் உள்பட சம்ஸ்கிருத வசனத்தில் அவர் இயற்றியுள்ளார்.

நாகர எழுத்திலும் தமிழ் எழுத்திலும் மூலத்தை அச்சிட்டு, தமிழில் கருத்துரை மற்றும் விரிவுரையுடன் ராகவாச்சாரி அவர்கள் தொகுத்து வெளியிட்டுள்ளார். தெளிவான விளக்க உரையும் எளிய நடையும் நூலின் சிறப்பு அம்சங்கள். அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்படும் அச்சுப்பிழைகளைத் தவிர்த்திருக்கலாம்.

நூலின் இறுதியில் இராமனின் வமிசாளியைக் கொடுத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## திருவடி மாலை

ஆசிரியர்: இரா. இளங்கோதாசன்; வெளியீடு: திருக்குமரன் பதிப்பகம், 'வள்ளுவர் இல்லம்', 10-4-181, சேசாபிரான் தெரு, சித்தூர்-517001 (ஆந்திரா); பக்கங்கள் iv+84; விலை ரூ. 5/-

பக்தி இயக்கத்திற்கு மிகப் பழங்காலத்திலிருந்தே பக்க பலமாக விளங்கி வருவது இசைப் பாடலாகும். ஏழுமலை வாழும் எம்பெருமான், வடிவழகனுன தணிகை வளர் முருகன், சிவனின் உடலின் பாதியில் நின்ற அம்பிகை, பரிமளப் பிரியனுன சபரிமலை வாசன் ஐயப்பன், தில்லை நடராசன், வேலூர்க் கோட்டையில் வதியும் ஜலகண்டேசுவரர் ஆகியோர் மீது அமைந்துள்ள எழுபத்தொன்று இசைப் பாடல்கள் கொண்ட நூல் இது. பல்லவி, அனுபல்லவி, சரணம் ஆகியவற்றுடன் பாடலாசிரியர் இயற்றியுள்ள இசை உருப்படிகள் பாராட்டத் தக்கனவாகவே அமைந்துள்ளன.

இவற்றுள் சிலவற்றைத் தொகுத்து இசையுடன் நீண்ட நேர இசைத்தட்டு ஒன்று தயாரிக்கப்பட்டிருப்பதே இவற்றின் சிறப்பிற்குச் சான்றுகும்.

இறைமையின் மாட்சியினையே பாடினுலும் சாதிக்கொடுமை, வேலையில்லாமை, ஆதிக்க வெறி, சமூகக் குறைபாடுகள் ஆகியவை ஒழிந்திடவும் இறைவன் துணை புரிய வேண்டும் எனக்கூறியிருப்பது கவனிக்கத்தக்கது

## ஊருக்கு உழைத்திடல் யோகம்:

ஆங்கில மூலம்: ஏகநாத் ரானடே; தமிழாக்கம்: எஸ். சுவாமிநாதன்; வெளியீடு: விவேகானந்த கேந்திரம், கன்யாகுமரி—629702, தமிழ்நாடு; பக்கங்கள் x+208; விலை ரூ. 10/-

மேலை நாடுகளில் போலவே நமது நாட்டிலும் மக்களுக்குத் தொண்டு புரியும் ஸ்தாபனங்கள் உருப்பெற வேண்டும், அவற்றைச் சமய அமைப்பின் முக்கியமானதொரு பகுதியாகக் கருத வேண்டும் என்னும் சுவாமி விவேகானந்தரின் கருத்திற்குச் செயலுருவம் அளித்தவர்களுள் ஏகநாத் ரானடே முக்கியமானவர். வாழ்நாள் முழுவதும் பிரம்மசரியம் பேணி, கட்டுப்பாடும் ஒழுக்கமும் நிறைந்த சமூகத்திற்குத் தன்னலமின்றித் தொண்டு புரியக் கூடிய தொண்டர்களை அவர் விவேகானந்த கேந்திரத்தில் உருவாக்கினுர். சமூகத் தொண்டும் சமயத் தொண்டே என்னும் அடிப்படையைக் கொண்டது அவ்வமைப்பு.

அத்தகைய தொண்டர்களின் பயிற்சிக் காலத்தின்போது ஏகநாத் பல சொற்பொழிவுகளின் வாயிலாக உயரிய நெறிகளை வளர்க்கும் வகையில் பயிற்சியைத் திட்டமிட்டிருந்தார். அச்சொற்பொழிவுகள் தமிழில் மொழி பெயர்க்கப் பெற்று 'ஊருக்கு உழைத்திடல் யோகம்' என்னும் தலைப்பில் நூல் வடிவம் பெற்றுள்ளது.

முப்பத்தைந்து தலைப்புகளில் உண்மையான தொண்டர்களின் இலக்கணங்கள் யாவை, அவர்கள் எங்ஙனம் பற்றற்ற நிலையினை மேற்கொண்டு, உலகு அனைத்தும் ஒரு குடும்பம் என்னும் எண்ணத்துடன் சமூக சேவை புரிய வேண்டும் என்பனவற்றை எல்லாம் விரிவாக விளக்கியிருக்கின்றுர் ஆசிரியர். ஒரு முனைப்புடன் பொது நலத்தொண்டாற்ற விரும்புவோர் அனைவருமே இந்நூலைப் படித்துப் பயன் பெறலாம்.

தமிழாக்கம் ஆற்றொழுக்குப் போன்ற நடையில் தெளிவாக அமைந்திருக்கின்றது.

ஒவ்வொரு நூலகத்திலும் தனிப்பட்டவரிடமும் இருக்க வேண்டிய நூல்களாம் இவை.

அ. நடராஜன்.
*திருப்பதி.*



# பாவையின் தத்துவ விளக்கம்

சீரிய நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டெழுவதே இலக்கியங்கள். இலக்கியங்களின் உள்ளுறை பொருளை விளக்க முயலுவதே தத்துவம். உணர்வுப் பெருவெள்ளத்தில் திளைக்கும் கவிஞன் அவன் உணர்வுகளுக்கு வடிவம் கொடுக்க எண்ணுகிறான். அவ்வெண்ணத்தின் முகிழ்வே இலக்கியமாக அரும்புகிறதெனலாம். அவன் படைக்கும் இலக்கியங்கள் அவன் கற்ற துறையைப் புலனாக்கிவிடும். அவனுடைய உள்ளப்பாங்கையும் அறிவிக்கும். பாடல்களில் நாம் காணும் உட்பொருட்களைக் கவிஞன் புகுத்தவேண்டும் என்று எண்ணுவதில்லை. அவை தாமாக அவன்றன் பாடல்களில் இடம் பெறுகின்றன. சங்க இலக்கியங்களில் இவ்வுள்ளுறையை ''உள்ளுறை உவமம்'' என்றும், ''இறைச்சி'' என்றும் பெயரிட்டனர். ஆனால், பக்தி இலக்கியங்களின் உள்ளுறை பொருளாகப் பொதிந்து நிற்பது 'தத்துவம்'. எனவே இத்தத்துவத்தை இறைச்சிப் பொருளாகக் கோடல் சாலும். உடலுக்குள் இருந்து உயிர் உடலை இயக்குமாப்போல் இறைச்சியாகிய தத்துவமும், செய்யுளாகிய உடம்பில் நின்று இயக்குகிறதெனலாம்.

திரு. D K. சௌந்திரராஜன். (B.S.M.S.)
திருநெல்வேலி.

ஆண்டாளுடைய பாடல்கள் என்னன; எளிமையில் இனிமை படைத்தன; சமயப் பேருண்மையைத் தெளிவாக எடுத்தோதுவன. பொதுவாகத் திருப்பாவையை எண்ணுவோர்க்கு அது ஒரு லௌகிக நோன்பை அடிப்படையாகக்கொண்டெழுந்தனவாகக் காட்சியளிக்கும். திருப்பாவை ஆண்டாளுடைய பக்தி அனுபவங்களைப் பெய்து வைத்திருக்கும் தங்கப்பாத்திரம்: அமிர்த கலசம். பகவானுக்கு ஆளாகி உறவு பூண்டு, ஒவ்வொருவரும் தமக்கு இசைந்த தொண்டு செய்யுமாறு திருவருள் புரிய வேண்டுமென்று பெருமாளிடம் கைங்கர்யப் பிரார்த்தனை செய்து கொள்வது திருப்பாவையின் தேர்ந்த உட்பொருள். இது வைணவ சாரமான தனிப்பெருங்கொள்கை.''

எந்தக் காலத்திலும் கண்ணனை அணுகலாம். கடுந்தவம் வேண்டாம். யாகம் வேண்டாம். யோகம் வேண்டாம். அவற்றுக்கெல்லாம் பகையான மோகத்தையே பக்திக் காதலாக்கிக் கொண்டு பரமனை அணுகிவிடலாம். ஆசை பகையல்ல. கண்ணனை அடைய வேண்டுமென்ற ஆசை ஒன்றே போதுமானது. அன்பினால் இறைவனை அடையலாம் என்ற உயர்ந்த தத்துவத்தை ஆண்டாள் விளக்குகிறார். அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையல்லவா இறைவன்? அன்பு நெறியே வைணவநெறி என்று விளக்கிப்போந்தனர் அம்மையார்.

திருப்பாவையின் தத்துவம்!

ஸ்ரீ தத்துவமே கோதா தத்துவம், ஸ்ரீ என்ற சொல்லுக்கு ''திரு'' என்று பொருள். ''வேதமே ஸ்ரீ

ஆம்.'' "ஆண்டாளின் உபநிஷத்து'' என்று வேதாந்த தேசிகர் தமது மணிப்பிரவாள நூலொன்றில் திருப்பாவையைக் குறிப்பிடுகிறார். இந்த உபநிஷத்தும் ஆண்டாளின் வேறு பாடல்களின் பொருளும் வடநாட்டில் வெள்ளமிட்டுத்தான் அங்கே ஒரு மீராபாய் தோன்றுவதற்குரிய பக்தி வளத்தை அமைத்துக் கொடுத்தன எனலாம். எனவே ஆன்றோர் திருப்பாவையை ''வேத மனைத்துக்கும் வித்து'' என்றனர். வேதங்கள் காமதேனு என்றால் அதன் பால் திருப்பாவை எனலாம். ஆழ்வார் தம் அருளிச் செயல்களை அதனினும் உயர்ந்தன என்றே கருத இடமுண்டு. ஏனெனில் வேதங்கள் இறைவனை முழுமையாக உணராமல் இறைவனை "இதுவல்ல, இதுவல்ல'' என்று கூறிக் கொண்டிருக்கின்றன. ஆனால் கோதை தமிழ் பரமனடி காட்ட வல்லதாய் உள்ளது.

ஸ்ரீவைணவத் தத்துவங்கள்:

ஸ்ரீ வைணவர்களுக்கு இன்றியமையாத மூன்று தத்துவங்கள் திருநாமம், பிரபத்தி அல்லது சரணாகதி, துவயம் என்பனவாம். திருநாமம் இறைவனைக் காட்டிலும் விரைவிலும் பலன் தரவல்லது. இங்குத் திருநாமம் என்று குறிப்பிடுவது திருமந்திரத்தையே யாம்.

திருமந்திரம்:

திருப்பாவையில் திருமந்திரத்தின் பொருள் மிகத் தெளிவாக விளக்கப்படுகிறது. துவயத்துக்கு சங்க்ரமமாக திருமந்த்ர யோஜனை காட்டப்படுகிறது இப்பிரபந்தத்தாலே. ''நமோ நாராயணா வென்பாரே'' என்றிரே இவர் தாம் அருளிச் செய்தது.

ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு "ஓம் நமோ நாராயணாய'' என்னும் அஷ்டாச்சர மந்திரம் மிகவும் இன்றியமையாதது. ''ஓம்'' என்பது பிரணவத்தைக் குறிக்கும் மூல மந்திரம். ஓம் என்பதில் அகரம் ஆண்டவனைக் குறிக்கும். மகரம் உயிரைக் குறிக்க, உகரம் வாசத்தைக் குறிக்கிறது. இத்திருமந்திரத்தின் பெருமையை உரையாசிரியர், உரை வேந்தர் ஸ்ரீ பெரிய வாச்சான் பிள்ளை அவர்கள், "உத்தமன் பேர்'' என்கிறார் திருமந்திரத்தை. முதற் பாட்டில் "நாராயணன்'' என்கையாலும், இரண்டாம் பாட்டில் ''பரமன்'' என்று அந்த மந்த்ரார்த்தமான குணபூர்த்தியை சொல்லுகையாலும் இதில் மந்த்ரோக்த வியாப்திக்கு ப்ரத்திய பிஞ்ஞாகரமான திரிவிக்ரம பதானந்தத்தைச் சொல்லுகையாலும் திருமந்த்ரத்தைச் சொல்லுகிறது. அவன்றனக்கும் பிறருக்கும் உண்டான வாசி போலும் அவனுக்கும் திருமந்திரத்துக்கும். கட்டிப் பொன் போல அவன்; பணிப் பொன் போலே அவன் திருநாமம். "அவன்றன்னை இல்லை செய்கிறவர்களுக்கும் திருநாமங் கொண்டு காரியங்கொள்ளா நிற்பர்'' என்று விளக்கியுள்ளார்.

பாஞ்சராத்திரம்:

பிரம்மம், முக்தி, போகம், யோகம், பிரபஞ்சம் என்ற ஐந்து "ராத்ரம்'' ஏற்பட வழிகாட்டுவதால் வைணவத்திற்கும் பாஞ்ச ராத்ரம் என்ற பெயர் வழங்குகிறது என்பர். ''ராத்ரம்'' என்றால் ''அறிவு'' என்று பொருள். பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள பரந்தாமனின் பெயர்களைப் பாஞ்ச ராத்திர நாமங்கள் என வைணவர் அழைப்பர்.

திருப்பாவையின் முதல் ஐந்து பாசுரங்கள் முடிய பிரம்மமும், பிரபஞ்சமும் கூறப்படுகின்றன. ஆறாவது பாட்டு முதல் பதினைந்து முடிய சத்சங்கம் அதாவது யோகநிலை கூறப்படுகின்றது. பாசுரம் இருபத்தேழில் போகம் குறிக்கப்பட்டது. போகமாவது வைகுந்த வான் போகம் ஆம். இருபத்தெட்டு, இருபத்தொன்பது ஆகிய இரு பாடல்கள் மோட்சத்தைக் குறித்தன. இவ்வாறு பாஞ்ச ராத்ர நிலை திருப்பாவையில் விளக்கம் பெற்றுள்ளது. "பாற்கடலுள் பையத்துயின்ற பரமன், பாழியந் தோளுடைப் பத்மநாபன், புள்ளரையன், வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்து'' போன்ற பாஞ்ச ராத்ர நாமங்களும் விளக்கப்பட்டுள்ளன.

பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள நிலை இரண்டாவது நிலை. முதல் நிலையில் ப்ரமபத நாதனாக உள்ளான். அங்கே பெருமாள் நித்ய சூரிகளின் தலைவனாக உள்ளான். அங்கே தன்னிலும் தாழ்ந்தவர்க்கு உதவப் பெற்றிலோமே என்ற கருணையினால் உலக நன்மைக்காக பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள பரந்தாமன் அடுத்து அவதரிக்கிறான் என்பது ஸ்ரீ வைஷ்ணவ சத் ஸம்பிரதாயம் ஆகும். இத்தத்துவம் படிப்படியாக வளர்ந்து செல்வதைத் திருப்பாவையில் காணலாம். முதற்பாட்டில் 'நாராயணன்' என்கையால் பரமபத நாதனையும் இரண்டாவது பாசுரத்தில் "பாற்கடலுள் பையத் துயின்ற பரமன்'' என்கையால் பாற்கடல் வியூகத்தையும், ''ஓங்கி உலகளந்த உத்தமன்'' என்கையால் வாமனாவதாரச் சிறப்பையும் குறிக்கப் பெற்றன.

எனவே பரமபத நாதனைக் காட்டிலும் பிறர் காரியம் செய்யப் பெறுகைக்காக அவன் எடுத்த அவதாரங்களின் சிறப்பையே ஆழ்வார்களும் ஆதரித்துப் பேசுவாராயினர்.

சரணாகதித் தத்துவம்:

இறைவனிடம் அன்பு அல்லது பக்தி செலுத்துவது ஸ்ரீ வைஷ்ணவ தர்மம். வேதங்களைப் படிப்பதாலும், மிதமிஞ்சிய வெறும் அறிவாலும் பரம்பொருளைக் காண முடியாது. பரம்பொருள் தனது இச்சையாகவே மனமிரங்கித் தன்னை நமக்குக் காட்டும். ''சுவேதா சுவதர'' உபநிடத்தில் பகவானது கிருபையைப் பற்றியும், சரணாகதி தத்துவத்தைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது. புலன்களால் அறியப்படாத இறைவன் வாதப்

பிரதி வாதங்களுக்கு அப்பாற்பட்டவனாய் மனப்பூர்வமான அன்பினாலறியப்படுவன். உண்மையான அன்பு செய்பவனுக்கு அவன் தன்னை அறிவித்துக் கொள்ளுகிறான். தன்னை விரும்புபவரை அவன் விரும்புகிறான். ''எல்லா உபாயங்களையும் கைவிட்டு என்னையே சரணாக அடைபவனை நான் பாவத் தீயினின்றும் காத்து விடுதலை அளிப்பேன்'' என்பதை,

''சர்வதர்மான் பரித்யஜ்ய மாம்ஏகம்
சரணம் வ்ரஜா
அகம்த்வா சர்வபாபேப்யோ மோக்ஷ
யிஷ்யாமி மாஷுசஹ:''

என்று பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் கீதையில் கூறுகிறார். இதுதான் பிரபத்தி. ஞானத்தைவிட பக்தியும், பிரபத்தியும் சிறந்தவை. தங்கள் சித்தத்தை அவன் சித்தமாக்கிக் கொள்வதே சரணாகதி அல்லது பிரபத்தி எனப்படும். பிரபத்தி செய்பவர்கள் பிரபன்னர்கள்.

இம்முறையில் பிரபத்தி செய்தவள் ஆண்டாள். பாவையின் பாடல்கள் பெரும்பாலானவற்றில் இதன் தத்துவம் பேசப்படுகின்றன. 'அவனை அடைய அவனே வழி' என்பதை நோன்பு நோற்க பறையை அவனே தருவான் எனக்கூறி அவனிடமிருந்தே பறை பெற்று அவனையே அடைய நோன்பு நோற்பதால் பெறப்படும்.

அடியார் குழாத்தை முன்னிட்டும், நப்பின்னையை முன்னிட்டும் இறைவனை சரணாகதி அடைகிறாள் ஆண்டாள். எனவே, ஆறும் பாசுரம் முதல் பதினைந்தாம் பாசுரம் முடிய தன் திருத்தகப்பன்மார்களான ஆழ்வார் பதின்மரை எழுப்பி அவர்களிடம் சரணாகதி செய்து பின் நந்தகோபன், யசோதை, பலராமன் முதலியோரை எழுப்பி அவர்களைச் ஆசான்களாகவும், அடியார்களாகவும் கொண்டு அவர்களைச் சரண் புகுந்து, அம்மையான நப்பின்னையை முன்னிட்டு அவளைச் சரண் புகுந்து, அதன்பின் ஆண்டாள் பகவானிடம் சரணாகதி செய்வதன் மூலம் அவளின் குருபக்தி, பாகவத பக்தி முதலியன தெளிவாக விளக்கப்படுகின்றன. ஆசானை முன்னிட்டு நடத்தாத எந்தச் செயலும் பலனளிப்பதில்லை என்பது வைணவரின் அசைக்க முடியாத துணிவு. இத்தத்துவத்தையும் ஆண்டாள் விளக்குகிறாள்.

''குறைவொன்றுமில்லாத கோவிந்தா
உன்றன்னோடு
உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது''

என்றும்,

''இற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்
றன்னோடு
உற்றோமே யாவோம்; உனக்கே
நாமாட் செய்வோம்
மற்றை நம் காமங்கள் மாற்று''

என்றும் ஆண்டாள் சரணாகதி பண்ணுகிறாள்.

அடியாரின் இலக்கணம்:

ஆண்டாள் நாச்சியாரின் பாசுரங்களில் ஸ்ரீ வைணவன் ஒருவன் எவ்வாறு இருக்க வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளது. வைணவன் ஒருவன்,

''கொக்குப் போல் இருப்பான்,
கோழிப் போல் இருப்பான்,
உப்புப் போல் இருப்பான்,
உம்மைப் போல் இருப்பான்.''

அவன்தான் உண்மையான ஸ்ரீ வைஷ்ணவன்

இக்கருத்தையும் நாம் திருப்பாவையில் காண வியலும். ''கள்ளம் தவிர்த்து கலந்தேலோரெம்பாவாய்'' என்பதால் கொக்குப் போல் இருக்க வேண்டுமென்பதும், ''புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக் கிள்ளிக்களைந்தானை கீர்த்திமை பாடிப்போய் பிள்ளைகளெல்லாரும் பாவை களம் புக்கார்'' என்பதாலும், ''வாடி உலகினில் பெய்திடாய் நாங்களும், மார்கழி நீராட மகிழ்ந்து'' என்பதாலும் கோழிப் இருப்பான், உம்மைப் போல் இருப்பான் என்பதும், ''நீராடப் போதுவீர் போதுமினோ'' என்பதால் உப்புப் போல் இருப்பான்



ஸ்ரீ தியாகராஜர் கோயில்-திருவொற்றியூர்.
திருமதி: கமலா மாரியப்பன்—கோவை.

வைணவன் என்பதும் பெற்றும். இவ்வாறு சிறப்புமிக்க அடியார்களை ஆண்டாள் தம் தலைமீது வைத்து போற்றி பரவுவாராயினர். ஆண்டாளும், மதுரகவி ஆழ்வாரும் பாகவதரைப் போற்றுவதில் தலை நின்றவர்கள்.

வேதமனைத்திற்கும் வித்து:

வேதத்தின் சாரத்தை தன் மனதில் வாங்கி ஆண்டாள் அதன் பொருளைத் தேனினும் இனிய தமிழ் மொழியாக்கித் தந்து இருக்கிறார். திருப்பாவைக்கு ஈராயிரப்படி உரையெழுதிய சுவாமிகள் திருநாராயணபுரம் ஆண் என்னும் ஜகந்யாசார்ய சுவாமிகள் திருப்பாவையின் சிறப்பை வெளியிடுகிறார். எம்பெருமானாரை, ''ஓரிரு பாவைக்கு அர்த்தம் அருளிச் செய்ய வேணும்'' என்ன திருப்பல்லாண்டுக்கு ஆள் கிடைக்கினும், பாவைக்கு ஆள் கிடையாது'' என்று அருளிச் செய்தார். மோவாய் எழுந்த முரடர் கேட்கை அதிகாரிகளல்லர். முலையெழுந்தார் கேட்க வேணும் என்றிருக்கும் அதிலும் எம்பெருமானை தாங்கள் அனுபவிக்க வேணும் என்றிருக்கும் பரிவாணிச்சிகளான

பிராட்டிமார்க்கும் கேட்க நியாய மல்ல. பல சொல்லியென்? பத்து ஆழ்வார்களுடைய சார பூதையான தானே சொல்லித் தானே கேட்கு மத்தனை என்றருளிச் செய்தார். "பதின்மருடைய ஞானமும் ஸ்திரீ தனமாக அவள் பக்கலிலேயிறே குடி கொண்டது". "பத்துப் பேர்க்கு ஒரு பெண் பிள்ளையிறே" என்றனர்.

எனவே, வேத உபநிஷத் கருத்துக் களைப் பாடல்களில் பொதிய வைத்து பாடியுள்ளமை ஆண்டாள் தம் திறனை தெரிவியா நிற்கும். வட சொற் கடந்து தென் சொல்லை தேர்ந்த வர்களாலொழிய இப்பாசுரங்களுக்கு உரை காண்பதரிது. எடுத்துக்காட் டாக ஓரிரு இடங்களை நோக்கு வோம்.

நான்காவது பாசுரம், "ஆசாரியன் பகவத் குணனுபவம் என்னும் கட லில் மூழ்கி அதன் தத்துவத்தை கிர கித்துக் கொண்டு உயர் பீடத்திலேறி அறிவற்றவர்களுக்கு ஞான மழை பொழிய வேண்டும்" என்னும் கருத்தை கொண்டுள்ளது. இக் கருத்து அதர்வண வேதம், காண்டம் 4; சூக்தம்-117 இன் உட்பொரு ளாக உள்ளது. தைத்ரீயோபநிடதம் ஆனந்த வல்லியின் முதற் சூத்திரப் பொருளாகவும் உள்ளது. அதன் கருத்து வருமாறு:

"குரு சிஷ்யர்களாகிய எங்கள் இருவரையும் சேர்த்து பிரம்மம் காப் பாற்றட்டும். எங்கள் இருவரையும் சேர்த்து போஷிக்கட்டும். நாங்கள் இருவரும் சேர்ந்த வீர்யத்துடன் உழைப்போமாக. எங்கள் அத்யய னம் கூர்மையுள்ளதாகவும், பிரகாச முள்ளதாகவும் ஆக வேண்டும். ஒரு போதும் நாங்கள் ஒருவரை யொரு வர் துவேஷியாமலிருக்க வேண்டும்."

இக்கருத்து ஆசானுக்கும், மாண வனுக்குமுள்ள உறவை புலப்படுத்திக் கொண்டிருக்கிறது.

"வேதப் பொருளே பிரம்மம். பிரம வடிவனே சிங்கன். கழலுன் மேற் சிங்கனே மறைமுடி மேற்பிரம் மம். அடி தொடங்கி முடியளவாக விளக்கும் தத்துவமே பரதத்துவம், அத்தத்துவமே சிம்மத் தத்துவம். அருள் மாரி என்பதே அதன் பொருள். ஆண்மை சிறந்து அருள் சுரக்கும் பெற்றியதே சிம்மம் ஆம். இத்தகையதோர் சிம்மத்தின் திரு நாமங்களே நாராயணன், பகவான், புருஷோத்தமன், பிரம்மம், திரு மால் முதலியன. "என் சிங்கப் பெருமான்" என்று நம்மாழ்வாரும், "தெள்ளிய சிங்கமாகிய தேவு" என்று திருமங்கையாழ்வாரும், 'சீரிய சிங்கம்' என்று ஆண்டாளும், பாணிநி இலக்கணம் விளக்கிய பரம்பொருள் களுக்கு உற்றதும், சிறந்ததும் ஆகிய தனித் திருநாமமே சிம்மம் என்ற தையே செந்தமிழாய் அருளிச் செய் தார்கள்.

சுமந்திரன் அழைத்ததும், "மலை யினிடத்திலுள்ள குகையிலிருந்து புறப்பட்டு எழுந்து வரும் சிம்மத் தைப் போல் இராமபிரான் அரண் மனையிலிருந்து வெளி வந்தான்" என் பதை வால்மீகி முனிவர்,

"பர்வதாதிவ நிஷ்க்ராம்ய ஸிம்ஹோ
கிரிகுஹாசய:"

என்று தம் இராமாயணத்தில் அருளு கிறார். இக்கருத்தினை ஆண்டாள், "மாரி மழை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்" என்று தொடங்கி ஒரு பாசுரமாக பாடியிருப்பது அவர் தம் வடமொழிப் புலமையினைக் காட்டுவதோடன்றித் தமிழினிடத்து அவர் கொண்டுள்ள ஈடுபாட்டினையும் காட்டுகிறது.

வடமொழியிலும், கிரந்தத்திலும் எழுதப்பட்டுள்ள வேத உபநிடதக் கருத்துக்களின் சாரத்தை தேனினு மினிய தமிழில் குழைத்துத் தந்திருக் கும் ஆண்டாளின் கருணைத் திறன் என்னே! தன்னை அழித்தாகிலும் பிறரை வாழ வைக்க வேண்டுமென் னும் உத்தம குணம் இருந்தாலன்றோ உலக மக்கள் உய்யும் வண்ணம் இவ் வரிய இலக்கியப் பேழையை, தத்து வக் களஞ்சியத்தை ஆக்கித் தந்தனள்.

இதுகாறும் ஓரளவு திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்ற இரு நூல்களிலும் பொதிந்து கிடந்த சில தத்துவ விளக்கங்களைக் கண்டோம். அதற்கு ஓரளவு பொருள் காண முடி யுமே தவிர அதன் முழுப் பொருளை யும் விளக்கி விடுதல் என்பது இய லாத செயல். இறைவனைப் பற்றிய இந்நூலும் இறைமையை அடைந்து விட்டது.

இறைவனை எவ்வாறு ஒருவராலும் அறுதியிட்டு முழுமையாகக் கூறவிய லாதோ அவ்வாறே ஆண்டாள் நாச்சி யாரின் அமுத வாக்குகளின் உள்ளத் தையும் காணல் அரிது. நோக்கு வார்க்கெல்லாம் நோக்கும் வகையில் பொருளளிக்கிறது திருப்பாவை.

நாமெல்லோரும் உய்ந்து நற்பேற டைய வேண்டுமென்று திருப்பாவை யின் உள் அர்த்தங்களை உள்ளத்தை உருக்கும் வகையில் உரையெழுதிப் போந்த ஸ்ரீ வைணவ அடியார்களின் திருத்தாள்கள் அடியேன் தலை மேலவே. திருப்பாவை ஒவ்வொரு பாசுரமும் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கையும் நல்குவன். ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானு டரை வையம் சுமப்பதும் வம்பு என் பது உண்மையாம்.



## அறிவிப்பு

ஸப்தகிரிக்கென்று ஒரு வருடம் அல்லது அதற்கு மேற்பட்ட காலத் திற்கு அனுப்பப்படும் சந்தாத் தொகை மட்டுமே ஏற்றுக்கொள்ளப் படும். ஒரு வருடத்திற்கும் குறை வான கால அளவுக்காக அனுப்பப் படும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

# இரு பாவைகள்!

"சமயம்" என்பது மக்கள் அறிவு விளக்கம் பெற்று மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்து உயிர்க்கு உறுதி எய்தி பேரின்பமடைவதற்குரிய நெறி. நாயன்மார்களும் ஆழ்வார்களும் நமக்கு வழிகாட்டிகளாக உள்ளனர். இருசாராரும் முப்பொருளுண்மையை வலியுறுத்தினர்.

நமது சமயத்துக்கு சைவமும் வைணவமும் இரு கண்கள். திருமுறைகளும், திவ்யப் பிரபந்தங்களும் அக்கண்களின் கருமணிகள். 'திருநெறிய தமிழ்' என்றார் சம்பந்தர். 'ஞானத் தமிழ்' என்றார் பூதத்தாழ்வார். தாச மார்க்கம் அல்லது சரியை என்பது இறைவனும் ஆன்மாவும் ஆண்டான் அடிமைத் தொடர்பு கொண்டதாகக் காட்டும் நெறி. சத்புத்திர மார்க்கம் அல்லது கிரியை தந்தை தனயன் தொடர்பையும், சகமார்க்கம் அல்லது ஞான மார்க்கம் குரு சிஷ்ய அல்லது நாயகன் நாயகி தொடர்பையும் காட்டும் மார்க்கங்கள்.

இறைவன் முன்பு உயிர்கள் அனைத்தும் நாயகிகளே! ஞான மார்க்கத்தை வற்புறுத்திய பேரடியார்கள் மாணிக்க வாசகரும், ஆண்டாள் அம்மையாரும் ஆவர். அவர்கள் அருளிய திருவெம்பாவையும் திருப்பாவையும் நமது சமயமாகிய கண்ணிற் கருமணியுள் ஆடும் பாவைகள் போன்றவை என்று ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அழகாக வர்ணித்துள்ளனர்.

"என்னிரு கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்" என்பது அப்பர் பெருமான் திருவாக்கு. சுமார் முப்பது ஆண்டுகளாக தீவிரமாக மார்கழி மாதம் நாடெங்கும் திருவெம்பாவை திருப்பாவை மகாநாடுகளும், சமயச் சொற்பொழிவுகளும், திருக்கூட்ட வழிபாடுகளும், இரு பாவைகளின் முழக்கமும் நடைபெற்று வருகின்றன.

















இவ்விரு பாவைகளும் மார்கழி மாதத்தில் பாடப் பெறுகின்றன. மாதங்களுள் நான் மார்கழியாக இருக்கின்றேன் என்பது கீதாச்சாரியன் அருள் வாக்கு. இம்மாதத்தில் தான் திருவாதிரைத் திருநாளும் வைகுண்ட ஏகாதசியும் வருகின்றன. தேவருக்கு ஒரு வருடம் ஒரு நாளாகவும் அதில் 'தை' முதல் 'ஆனி' வரை

'சன்மிஷ்டை'

பகற்காலமாகவும், 'ஆடி' முதல் 'மார்கழி' வரை இரவாகவும் கணக்கிடுதல் மரபு. அதிகாலை ஐந்து நாழிகைகள் மார்கழி மாதமாதலால் மக்கள் எழுந்து நீராடி இறை வழிபாடு செய்யும் காலமாகக் கொண்டாடப் பெறுகிறது.

இராக்காலம் இறை சக்தி உலகத்தை அழிக்கும் காலத்தையும், பகற்காலம் அச்சக்தி உலகத்தைப் படைத்துக் காக்கும் காலத்தையும் விடியுமுன் ஐந்து நாழிகைக் காலம் உலகத்தை மீண்டும் படைக்கத் தொடங்கும் காலத்தையும் குறிக்கும். இவ்வருட் செயலைப் புகழ்ந்து பாடிய திருவெம்பாவைத் தலைப்பில் 'சத்தியை வியந்தது' என்று கூறப் பெற்றுள்ளது.

'அறிவாற் சிவனே' என்று போற்றப் பெற்ற மாணிக்க வாசகர் அல்லும் பகலும் அனவரதமும் சித்தத்தைச் சிவன் பாலே வைத்த பேரடியார். தாம் காணும் காட்சிகள் அனைத்தையும் சிவபரமாகவே பாடுமியல்பினர்.

திருவெம்பாவை திருப்பெருந்துறையில் பாடப் பெற்றதெனச் சில

ரும், தில்லையில் அருளிச் செய்தது என்று சிலரும் கூறுவர்; ஆனால், திருவாதவூரடிகள் புராணம் அருளிய கடவுண் மாமுனிவர் திருவெம்பாவை திருவண்ணாமலையில் பாடியதாகவே கூறுகின்றனர். ஒரு சமயம் மாணிக்க வாசகர் திருவண்ணாமலை சென்ற போது மார்கழித் திங்களில் வைகறையில் பெண்கள் ஒருவரையொருவர் எழுப்பிக் கொண்டு இறைவன் புகழைப் பாடிக் கொண்டு நீராடப் போகும் காட்சியைக் கண்டு உள்ளம் பூரித்து இப்பாவைப் பாட்டுப் பாடியதாக திருவாதவூர்ப் புராணம் திருவம்பலச் சருக்கத்தில் 'அன்று வந்தென்னையாளும் அணி அண்ணாமலையாய் போற்றி என்று தம்பரிவால் ஏத்தி இறைஞ்சியங்குறையும் நாளில்'

'' மாதர் கொண்மாதரெல்லாம் மார் கழித் திங்கடன்னில்
ஆதிரை நாள் முன்னீரைந்தாகிய தினங்கடம்மின்
மேதகுமனைகடோறு மழைத்திருள் விடிவதான
போதிவர் தம்மிற் கூடிப்புனற்றிட மாடல் செய்தார்''
'' அன்னவரியல்பு கண்டாராங்கவர் புகன்றதாக
மன்னிய திருவெம்பாவை வாசகம் பேசி''

எனக் கூறப்பட்டுள்ளது.

'மலவிருளுற்று உறங்காமல் மன்னு பரிபாகர் அருள் செல முழுக வருக வெனச் செப்பல் திருவெம்பாவை' என்று கூறுகிறது திருப்பெருந்துறைப் புராணம்.

'திரு' என்பது தெய்வத்தன்மையையும், 'எம்' என்பது உயிர்த் தன்மையையும், 'பாவை' என்பது வழிபாட்டுக்கினிய திருஉருவையும் குறிக்கும்.

இறைவன் ஏக நாயகன். உயிர்கள் நாயகிகள். அவை மும்மலங்களாகிய இருளில் உறங்குகின்றன. அம்மலங்களினின்றும் விடுவிப்பதே துயிலுணர்த்தல்! பக்குவப்பட்ட உயிர்கள் முன்பு துயிலுணர்ந்தெழுந்து மற்ற உயிர்களை மலபரிபாகப்படுத்தி இறையருளில் தோய்வித்தலே நீராடலும் நோன்பும்.

திருவருள் சக்தியாகிய அம்மையார் பாவைத் திருவுருவில் நின்று ஏற்று ஆதிரை விழாவில் ஆனந்தக் கூத்தன் தாண்டவத்தில் தூக்கிய திருவடியருளால் அவனுடன் இரண்டறக் கலக்கும் பேரின்பத்தை யளிக்கிறாள் என்பது தத்துவப் பொருள் என்பர்.

பண்டைக் காலத்திலிருந்து தமிழ் நாட்டில் இப்பாவை நோன்பு ஆன்றோர் அனுஷ்டானப்படி நடைமுறையில் இருந்து வருகிறதென்பது 'மேலையார் செய்வனகள்' என்ற திருப்பாவையில் வரும் பகுதியில் காணப்படுகிறது.

'அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர் முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப் பனிபுலர் பாடி...' என்பது பரிபாடலில் காணும் குறிப்பு.

'' வையெயிற்றிவர் நாப்பண் வகையணிப் பொலிந்து நீ
தை யினீராடிய தவந்தலைப் பாடு வாயோ''

என்பது கலித்தொகை;

பூர்ணி மாந்தம் எனும் முறைப்படி பௌர்ணமிக்குப் பின் தைத் திங்கள் என்ற கொள்கைப்படி தை நீராடலும், மார்கழி திருவாதிரைக்குப் பின்னுள்ள நாட்களைக் குறிக்கும்.

'நறு வீயைம்பான் மகளிராடும் தை இத்தண் சுயம்போல்' என்பது ஐங்குறுநூறு.

'வான் பெயனைந்த புறத்த நோன்பியர் தையூணிருக் கையில்' என்பது நற்றிணை.

'' இன்னதண் பனிப் பருவநல் லிளநரு ஒழுகும்
கன்னியந்துழாய்க் கண்ணனெங் கணவனுகென்ன
அன்னமென்னடையாயர் தங்கன்னி யர் நோற்றார்
மன்னுவெம்பனி மால்வரைக் கன்னி யைத் தொழுதே''

என்பது பாகவதம்!

எனவே, சிறு பெண்கள் தாங்கள் நற்கணவரைப் பெற்று மண்ணில் நல்ல வண்ணம் வாழவும், நாட்டினில் பருவ மழை பெய்து உலகின்புற்றிருக்கவும், உயிர்க்குறுதி யெய்தி இறைவனருள் பெற்றுப் பேரின்ப மடையவும் மார்கழி மாதம் ஒவ்வொரு நாளும் வைகறையில் எழுந்து கூட்டமாகச் சென்று இறைவன் புகழ்பாடி நீராடி நோன்பு செய்தனர் என அறிகிறோம்.

மலையாள நாட்டிலும் இம்மார்கழி நீராடல் திருவாதிரைப் பெருவிழாவாக இளம் பெண்களால் கொண்டாடப் பெறுகிறது. சயாம் நாட்டில் ஆருத்ராதரி சனசமயத்தில் 'திரியம்பாவை திரிபாவை' என்ற உத்ஸவம் அரசாங்கச் சார்பில் நடைபெறுவதாகத் தெரிகிறது.

அர்த்த நாரீஸ்வரராகிய சிவபெருமானை விட்டு நீங்காத பராசக்தி அருளால் ஏவப் பெற்ற மனோன்மணி சக்தி பக்குவர்களான உயிர்களை மலங்களினின்றும் நீக்கி இறைவன் திருவடிகளில் சேர்ப்பிக்கும். இச் சக்தியே ஆன்மா, சூரியன், சந்திரன், ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவியாகிய அஷ்டமூர்த்திகளிடம் விளங்கும் சக்திகளை எழுப்புவதாகத் திருவெம்பாவை முதல் எட்டுப் பாடல்களும் அமைந்துள்ளன.

ஒன்பதாவது திருப்பாட்டிலிருந்து இருபதாவது பாடல் முடிய நவசக்திகளும் சேர்ந்து சிவபெருமானைப் போற்றிப் புகழ்ந்து துதிப்பதாக அமைந்துள்ளன. ஒன்பதாவது பாட்டிலும் பத்தொன்பதாவது பாட்டிலும் பயன் கருதி விண்ணப்பம் செய்கின்றனர். பத்தாவது பாடலில் திருக்குளம் செல்கின்றனர்.

பதினொன்று முதல் பதினெட்டு வரை அம்மையப்பர் வடிவமான திருக்குளத்தில் அவர் அருள் மய

மான நன்னீரில் திருவருளைப் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் நீராடு கின்றனர். இருபதாவது பாடலில் படைப்பு முதலிய ஐந்து தொழில் களினுண்மையும் அவற்றால் விளையும் பயனும் விளக்கப் பெற்றுள்ளன!

திருவாதிரைக்கு முன்பு பத்து நாட்களும் சிவாலயங்களில் திருவெம் பாவைப் பாடல்கள் மாத்திரமே ஓத லும், திருவாதிரையன்று திருவெம் பாவையைப் பாடிய பின்னர் தேவா ரம் முதலிய திருமுறைப் பாடல்கள் வழக்கம் போல் பாடுவதும் மரபு.

நாளொன்றுக்கு ஒரு பாடலாகத் திருப்பாவைப் பாடல்களை வைணவர் களால் மார்கழி மாதம் முழுதும் ஓதப்படுகின்றன. இவ்விரு பாவை களும் வேறு வேறு தெய்வச் சார்பு டைய வாயினும் ஒரு பொதுக் குறிப் புடையன என்பது அறிஞர் கண்ட உண்மை. இருபாவைகளிலும் சமயக் கருத்துக்கள் பொதிந்துள்ளன.

வான்முகில் வழாது பெய்து மலி வளம் சுரந்து குறைவிலாது உயிர்கள் வாழ்ந்து இன்புற வேண்டும் என்று இரு பாவைகளிலும் நோன்பின் பய னாக வேண்டப்படுகிறது. திருவெம் பாவையில் பெண்கள் மெய்யடியார் களைக் கணவராகப் பெற வேண்டு மென்றும், திருப்பாவையில் கோபி யர் கண்ணனைக் கணவனாகப் பெற வேண்டுமென்றும் பிரார்த்திக்கிறார் கள்.

திருவெம்பாவை முதற்பாட்டில் 'ஆதியுமந்தமுமில்லா அரும்பெரும் சோதி' என்றும், இரண்டாம் பாட லில் 'பரஞ்சோதி' என்றும் வரும் தொடர்கள் அதிகாலையில் சூரியோத யத்திற்கு முன் எழுந்து நீராடப் போகும் மக்கள்முன் தோன்றும் செக்கர் வானம் செம்பொற்சோதி மயமாய் விளங்கும் இறைவனை நினைப் பூட்டுவதாய் அமைந்துள்ளன.

கோயிற்றிருப் பதிகத்தில் மாணிக்க வாசகர் அருளிய,

"இன்றெனக்கருளி இருள்கடிந்துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்ற நின்தன்மை நினைப்பற நினைந்
தேன்
ஒன்று நீயல்லையன்றி ஒன்றில்லை
யாருன்னை யறிய கிற்பாரே"

என்ற பகுதியும்,

"சோதியாய்த் தோன்றும் உருவமே
யருவாம்
ஒருவனே சொல்லுதற்கரிய
ஆதியே நடுவே அந்தமே பந்தம்
அறுக்கு மானந்த மாகடலே"

என்ற பகுதியும் நினைவுக்கு வரு கின்றன.

இவ்வாறு திருவெம்பாவையில் ஒவ் வொரு பாட்டிலும் உள்ளுறையாக சமய உண்மைகள் பொதிந்திருப் பதை எளிதில் காணலாம்.

திருவாதவூரர்க்கு மாணிக்க வாச கர் என்ற பெயர் இறைவனாலேயே சூட்டப்பெற்றது. இறைவனே குரு வாக அவருக்கு உபதேசம் செய் தான். அவனே அந்தண உருவில் தோன்றி திருவாசகத்தை எழுதிக் கொண்டான்.

மாணிக்க வாசகர் தில்லை யில் நடராஜப் பெருமான் திருவடிச் சோதியில் இரண்டறக் கலந்தார் என்ற வரலாறு யாவரும் அறிந்ததே! இவர் பொருட்டு இறை வன் இயற்றிய திருவிளையாடல்கள் பல. நரியைப் பரியாக்கியதும், பிட்டுக்கு மண் சுமந்து பிரம்பால் அடிபட்டதும் இவர் பொருட்டே யன்றோ!

ஆழ்வார்களுக்குள் ஆண்டாள் பூதேவியின் அம்சமாகவே அவ தரித்துப் பெரியாழ்வார் நந்தவனத் தில் திருத்துழாய்ப் பாத்தியில் தோன்றிச் சிறுபிராயத்திலிருந்தே கண்ணனிடம் அளவு கடந்த காதல் பூண்டு இறைவனுக்குக் கட்டிய பூ மாலையைத் தான் சூடியழகுப் பார்த் துக் கொடுத்து சூடிக் கொடுத்த நாச்சியாராக வாழ்ந்து வந்தாள்.

பக்தி மேலீட்டால் திருவில்லிப் புத்தூரையே ஆயர்பாடியாகவும், தன் தோழியரையே கோபிகளாக வும், வடபத்ர சாயியையே கண்ண னாகவும், அவன் திருக்கோயிலையே நந்தகோபன் அரண்மனையாகவும், கற்பனை செய்து கொண்டு மார்கழி மாதம் பாவை நோன்பு செய்து திருப்பாவைப் பாடல்களைப் பாடி யருளினாள்.

பல இடங்களில் கோபியர் பேச் சையே காண்கிறோம். திருப்பாவை யில் சமயக் கருத்துக்கள் நிரம்ப அடங்கியுள்ளன. திருப்பாவைக்குப் பொருள் கேட்டபோது எம்பெரு மானார் "திருப்பல்லாண்டுக்கு ஆள் கிடைத்தாலும் திருப்பாவைக்கு ஆள் கிடையாது. பிராட்டியார்க்கும் கேட்க நிலமல்ல—பல சொல்லியென்! பத்து ஆழ்வார்களுடைய சாரபூதை தானே சொல்லித் தானே கேட்கு மத்தனை" என்று அருளிச் செய்தா ரென்பர்.

ஏனைய ஆழ்வார்களுக்கெல்லாம் பேரருளான் "மயர்வற மதி நலம்" அருளினன். ஆண்டாளோ அவனையே எழுப்பித் தன் குறையை அவனிடம் விண்ணப்பித்துக் கொண்டாள். தன் வளர்ப்புத் தந்தையும் குருவுமாக விளங்கிய பெரியாழ்வாரை உபாய மாகக் கொண்டே இறைவனுக்குப் பூமாலையும் சாத்தி அவருடனேயே திருவரங்கத்துக்குச் சென்று மணக் கோலத்துடன் இறைவனுடன் இரண் டறக் கலந்தாள்.

பாவை நோன்பிற்குரிய கிரியை களைத் திருப்பாவையில் காண்கிறோம். நெய் பால் உண்ணாமை, மையிட்டுக் கொள்ளாமை, மலரால் அலங்கரித் துக் கொள்ளாமை, செய்யாதன செய்யாமை, தீக்குறளைச் சென்று ஓதாமையோடு ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாம் செய்தல் வற்புறுத்தப்படுகின்றன.

கண்ணனிடம் செல்லும்போது தூயோமாய்ச் சென்று தூமலர்த்



தூவித் தொழுது வாயினல் பாடி மனத்தினுல் சிந்திக்க வேண்டும்.

இரு பாவைகளிலும் ஒருமித்த கருத்துக்களுடன் பல ஒருமித்த சொற்களேயும் காணலாம். திருவெம்பாவையில் 16-வது பாட்டு மழைப் பாட்டு. திருப்பாவையில் 4-வது பாட்டு மழைப் பாட்டு. மூன்ருவது பாட்டிலும் மழை வழாது பெய்து நாடு செழிக்க வேண்டுமென்ற விண்ணப்பத்தைக் காண்கிரேம். திருவெம்பாவையில் மழையைத் தேவிக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. திருப்பாவையில் மழையைக் கண்ணனுக்கு உவமையாய்க் காட்டியிருக்கிறது.

'' இறைவி யிட்டிடையின் மின்னிப்
பொலிந்து எம்பிராட்டி
திருவடிமேற் பொன்னம் சிலம்பிற்
சிலம்பித்
திருப்புருவம் என்னச் சிலேகுலவி
அன்பர்க்கு
முன்னியவள் நமக்குமுன் சுரக்கும்
இன்னருளே
என்னப்பொழியாய் மழையே
லோரெம்பாவாய்''

என்பது திருவெம்பாவை!

''ஊழி முதல்வன் உருவம் போல் மெய்கறுத்துப் பாழியந்தோளுடைய பத்மநாபன் கையில் ஆழிபோல் மின்னி வலம்புரி போல் நின்ற திர்ந்து தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை போல் வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்'' என்பது திருப்பாவை!

இறைவியின் இன்னருள் பால் நினேந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து சுரக்கும் என்பதும், அடியவர்கருள் புரிய, ''தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை'' பொழிந்து அல்லல் போக்கும் என்பதும் அருள் மாரியின் கைம்மாறு கருதாக் கடப்பாட்டை நன்கு விளக்குவதாய் அமைந்துள்ளன.

''கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும் ஏழில் இயம்ப இயம்பும் வெண் சங்கெங்கும்'' என்பது திருவெம்பாவை. ''புள்ளும் சிலம்பின காண், புள்ளரையன் கோயில் வெள்ளே விளிசங்கின் பேரரவம் கேட்டிலேயோ'' என்பது திருப்பாவை.

''கேடில் விழுப்பொருள்கள் பாடினேம் கேட்டிலேயோ'' என்பது திருவெம்பாவை. ''கீசு கீசென்றெங்கும் ஆனேச்சாத்தன் கலந்து பேசின பேச்சரவம் கேட்டிலேயோ'' என்பது திருப்பாவை.

திருவெம்பாவையில் வரும்-வண்ணக்கிளி மொழியார் எல்லாரும் வந்தாரோ – எண்ணிக் கொடுள்ளவா சொல்லுகோம் என்பதுடன் திருப்பாவையில் ''எல்லாரும் போந்தாரோ போந்தார் போந்தெண்ணிக் கொள்'' என்பதை ஒப்பு நோக்குக.

மாணிக்க வாசகருக்கு இறைவன் கண்ணுக்கினியாஞய் தோற்றமளிக்கிருன். ஆண்டாளுக்குக் கண்ணன் மனத்துக்கினியான்.

திருப்பாவையின் முதல் பாட்டில் மார்கழி நீராட மகிழ்ந்தேலோரெம்பாவாய் என வருகிறது: திருவெம்பாவைக் கடைசிப்பாட்டில் 'போற்றி யாம் மார்கழி நீராடேலோரெம்பாவாய்'' என்று அப்பாட்டிலுள்ள எட்டுப் போற்றிகளுள் இறுதிப் போற்றியாக அமைந்துள்ளது:

திருவெம்பாவை 9-ம் பாட்டிலும் 19-ம் பாட்டிலும் பாவை நோன்பின் தனிப்பெரு நோக்கம் கூறப்படுகிறது. ''உன் அடியார்தாள் பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம், அன்னவரே எங்கணவர் ஆவார் இன்ன வகையே எமக்கு எங்கோன் நல்குதியேல் என்ன குறையுமிலோம்'' என்றும், 'எம்கொங்கை நின் அன்பர் அல்லார்தோள் சேரற்க, எங்கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்க!'

'கங்குல் பகல் எங்கண் மற்றென்றுங் காணற்க. இங்கிப்பரிசே நல்குதியேல் எங்கெழில் என் ஞாயிறு' என்றும் வேண்டுகின்றனர்:

திருப்பாவையில் ''குற்றேவல் எங்களேக் கொள்ளாமல் போகாது; என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்ஞேடு காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்'' என்று 29-ம் பாட்டில் இறுதி வேண்டுகோளாகக் குறிப்பிடப்பட்டு இறுதிப் பாட்டில் 'எங்

கும் திருவருள் பெற்றின்புறுவரெம் பாவாய்' என்று முற்றுப்பெறுகிறது:

3-ம் பாட்டில் 'தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து நீங்காத செல்வம் நிறைந்தேலோரெம் பாவாய்' என்று பிரார்த்தனை செய்யப்படுகிறது.

'புன மயிலே இளங்கிளியே' என்ற திருப்பாவைச் சொற்கள், திருவெம்பாவையில் உள்ள வண்ணக்கிளி மொழியார், முத்தன்ன வெண்ணகையார் என்ற சொற்களை நினைப்பூட்டுகின்றன. அவ்வாறே 'ஏலக்குழலி' 'கொங்குண் கருங்குழலி' என்பது திருவெம்பாவையில், ''கந்தம் கமழும் குழலி'' என்பது திருப்பாவையில்.

'மானே நீ நென்னலே நாளை வந்துங்களை நானே எழுப்புவன் என்றலும் நாணுமே போன திசை பகராய்' என்பது திருவெம்பாவை. 'எங்களை முன்னர் எழுப்புவான் வாய் பேசும் நங்காய்! எழுந்திராய்! நாணாதாய் நாவுடையாய்' என்பது திருப்பாவை!

'ஆதியும் அந்தமுமில்லா அரும் பெருஞ்சோதி', 'பரஞ்சோதி' 'சோதி திறம்பாடி' என்பவை திருவெம்பாவையில். ''ஆதியாஞ்சோதியே ஆயர்குலத்தினில் தோன்றிடும் அணி விளக்கு'', ''தோற்றமாய் நின்ற சுடரே'' என்பவை திருப்பாவையில்!

'வன்செவியோ நின்செவிதான்' என்பது திருவெம்பாவை. 'உன் மகள் தான் ஊமையோ அன்றிச் செவிடோ' என்பது திருப்பாவை.

'இன்னம் துயிலுதியோ; என்னே துயிலின் பரிசேலோரெம்பாவாய் 'ஈதென்ன உறக்கமோ' என்பது திருவெம்பாவை. 'கும்ப கர்ணனும் தோற்றும் உனக்கே பெருந்துயில் தான் தந்தானோ?' என்பது திருப்பாவை.

திருப்பாவையில் 2-ம் பாட்டில் 'பரமனடி பாடி' என்றும், 24-ம் பாட்டில், அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி, பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ் போற்றி கழல் போற்றி' என்றும், திருவடிகளைப் போற்றி கன்று குணிலா எறிந்தாய் குன்று குடையாயெடுத்தாய் வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி என்று திருக்கைகளையும், இறுதிப் பாட்டில் 'ஈரிரண்டு மால்வரைத் தோள் செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால்' என்று முகத்தையும் பாடியிருத்தல் கண்ணன் வர்ணனை பாதம் முதல் முகம் வரை அனுபவித்தாயிற்று.

24-ம் பாட்டில் உள்ள போற்றிகளும் அறுசுவை உண்டியைப் போல் தித்திக்கும். திருவெம்பாவை இறுதிப் பாட்டில் எட்டுப் போற்றிகளும் இறைவன் ஐந்தொழில்களையும் அஷ்ட மூர்த்தங்களையும் இறைவன் திருவடி நிழலே பேரின்பமும் ஆதி அந்தம் போகம் திருவருள் எல்லாம் என்பது வற்புறுத்தப்பட்டுள்ளது.

நோன்பு காலத்தில் விரதத்தோடிருந்த பெண்கள் நோன்பு முடிந்ததும் சூடகம் தோள் வளையோடு செவிப்பூடகம் என்றனைய பல்கலனும் அணிந்து புது ஆடை உடுத்து பால் சோறு மூட நெய் பெய்து முழங்கை வழி வாரக் கூடியிருந்து உண்டு உள்ளம் குளிர்ந்து மகிழ்ந்த செய்தி 27-ம் பாட்டில் கூறப்படுகிறது. திருவெம்பாவை விழா பூர்த்தியாகும் திருவாதிரை நாளில் ஆனந்தக்களி நடனத்தோடு களியும் சாந்தும் விநியோகிப்பது மரபு.

திருப்பாவை 18-ம் பாட்டில் நப்பின்னைப் பிராட்டியை கும்பன் மகளே என்றழையாமல் நந்தகோபாலன் மருமகளே என்று புக்ககமே பெண்களுக்கு முக்கியமென்பதைக் காட்டிக் கடை திறவாய் சீரார்வளையொலிப்ப வந்து திறவாய் மகிழ்ந்து என்று இருமுறை அழைக்கிறாள்.

இந்தப் பாடலைப் பாடிக் கொண்டு இராமானுஜர் தம் குரு பெரிய நம்பி வீட்டுக்கு சென்றபோது அத்துழாய் என்ற குருபுத்திரி கதவைத் திறக்கக் கண்டு அவளையே நப்பின்னையாகப் பாவித்து வணங்கினராம். இராமானுஜர் உகந்த பாட்டு என்று இப்பாட்டு



கோயில்களில் இரண்டு தடவை ஓது வது மரபு!

இரு பாவைகளிலும் இறைவனை 'ஊழி முதல்வன்' என்றழைக்கக் காண்கிறோம்.

திருப்பாவையில், முதல் பாட்டில் நாராயணனே என்று பரமபத நாதனை யும் அடுத்து பாற்கடலில் பையத் துயின்ற பரமன் என்று வியூக நிலை யையும், மூன்றும் பாசுரத்தில் ஓங்கி உலகளந்த உத்தமன் என்ற விபவ நிலையையும் குறிப்பிடக் காண்கிறோம்.

திருப்பாவைப் பாசுரங்களில் பெரும்பாலும் கண்ணனைப்பற்றியே பாடியிருப்பினும் அன்று இவ்வுலக மளந்த திருவிக்ரமனையும், சினத் தினுல் தென் இலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியானையும் பற் றிய குறிப்புக்களும் உள்ளன.

திருவெம்பாவையில் இறைவன் திருவடிப் புகழைப் பரக்கக் காண் கிறோம். விண்ணோர்கள் ஏத்துதற்குக் கூசும் மலர்ப்பாதம், பாதாளம் ஏழி னும் கீழ் சொற்கழிவு பாதமலர், அந்தமாம் செந்தளிர்கள், தோற்ற மாம் பொற்பாதம், போகமாம் பூங் கழல்கள், ஈறும் இணையடிகள், யாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன் மலர்கள் என ஐந்தொழில் களுக்கும் அவன் திருவடிகளே கார ணம் என்றும் அவன் மெய்யன்பர் களுக்கு எளிவந்த பிரான்.

"நந்தம்மைக்கோதாட்டி இங்கு நம் இல்லங்கள் தோறும் எழுந் தருளிச் செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகன்" என்று குறிப் பிடப்பட்டுள்ளது. இவ்வுண்மை யைப் பெரிய புராணத்தில் பல நாயன்மார்கள் வரலாற்றில் காண் கிறோம்.

தண்ணுர்தமிழளிக்கும் தண் பாண்டி நாட்டில் மாணிக்கவாசகர் மதுரை யருகே திருவாதவூரிலும், ஆண்டாள் திருவில்லிப் புத்தூரிலும் அவதரித் தவர்கள். இருவர் வாழ்க்கையும் ஆன்மா கடைத்தேறும் வழியைக் காட்டும் வகையில் அமைந்துள்ளன. இருவரும் இறைவனுடன் இரண் டறக் கலந்தவர்கள்.

இவர்கள் வாழ்ந்த காலத்தைப் பற்றிய ஆராய்ச்சி இன்னும் முடிந்த பாடில்லை. இவர்கள் எக்காலத்தவ ராயினும் அவர்கள் அருளிய தெய் வீகப் பாடல்களும் அவர்கள் புகழும் எக்காலத்துக்கும் உரியன என்பதில் யாதொரு வேறுபாடுமில்லை.

'பாவை பாடிய வாயால் கோவை பாடுக!' என்று இறைவனே கேட்டு மாணிக்கவாசகரைத் 'திருக்கோவை யார்' என்ற அகத்துறைப் பாடல் களைப் பாட வைத்தான் என்ற வர லாறு திருவெம்பாவையின் சிறப் பைக் காட்டுகிறது. திருக்கோவை யாருக்குத் திருவெம்பாவை வகை நூல் என்பர்.

'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என் னும் பழமொழி யாவருமறிந்ததே.

"வருமொழி செய் மாணிக்க வாசகநின் வாசகத்தில்
ஒரு மொழியே என்னையுமென் உடை யனையும் ஒன்றுவித்துத்
தருமொழி யாமென்னில் இனிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பியல் கூடுவ தேன் கூறுதியே"

என்பது இராமலிங்க சுவாமிகள் திரு வாக்கு.

"அன்னவயற் புதுவை ஆண்டாளரங் கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதியம் இன்னிசையாற்
பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக்கொடுத்தாளைச்சொல்"

என்பது உய்யக்கொண்டார் திரு வாக்கு.

"ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி!
திருப்பாவை முப்பதும் செப்பினுள் வாழியே!"

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற அடிப்படைக் கொள்கை யுடைய சைவரும் வைணவரும் திரு வெம்பாவை-திருப்பாவையின் குறிக் கோள்களை உணர்ந்து போற்றிப் பயன் பெறுவார்களாக. ●

# இடபகிரி

தற்போது திருமாலிருஞ்சோலை — அழகர் கோவில் என அழைக்கப்படும் திருத்தலமே இடபகிரி என்பதும் ஆகும். இத்திருத் தலம் தமிழ்நாட்டில் மதுரைக்குச் சிறிது வடக்கே உள்ளது. விமானம் சந்திர விமானம் ஆகும். தீர்த்தம் 'சிலம்பாறு' என சொல்லப்படு கின்றது. சுவாமியின் திருநாமம் "மாவலங்காரர்" என்பதாகும். பெயருக்கேற்ப அலங்காரமாகவே காணப்படுகிறார். தேவியின் பெயர் "சௌந்தரியவல்லி" என்று வழங்கப்படுகிறது. இங் குறையும் இறைவனின் பெயரால் 'அழகர் கலம்பகம்' என்னும் சுவை யான நூல் ஒன்று உள்ளது இத்திருத்தலத்து இறைவனின் பெருமையை ஆழ்வார்கள் பாடியுள்ளனர். உலகம் போற்றும் திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர் பிறந்தது இந் தத் திருத்தலத்திலேயே ஆகும். அவரது பெயரில் உள்ள 'அழகர்' என்ற சொல்லே ஆதாரமாகக் காணக் கிடக்கின்றது. வடநாட்டில் வராக பருவதத்துக்கு அருகே 'இரத்னகிரி' என அழைக்கின்ற திருத்தலத்துக் கும் இடபகிரி அல்லது விருஷபகிரி என்ற பெயருண்டு என்று விளம்பு வர். இத்திருத்தலத்தில் சுப்பிரமணியருக்கு திருக்கோவிலும் உள் ளது. அறுபடை வீடுகளில் ஒன்றாகவும் இத்திருத்தலம் அமையப் பெற்றுள்ளது.

தகவல்: முடிவை முத்து.

# பிறவிப் பயன்

உலகில் 'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்று கூறியுள்ளனர் நம் முன்னோர். கூன், குருடு, செவிடு முதலிய குறைபாடுகளின்றி நிறைவான மனிதப் பிறவியைப் பெற்றும் பலர் உலகியலில் உழன்றும், மொழியியலின் பிடியில் அகப்பட்டும், சாதி சமயக் கொடுமைகளில் அல்லலுற்றும், பொருளாதார ஏற்றத்தாழ்வுகளால் அவதிப்பட்டும் அமைதியின்றி வாழ்வதைக் காண்கின்றோம். ஏன் இந்த மனிதப் பிறவி தரப்பட்டது என்பதை ஒரு கணம் சிந்தனை செய்வோமானால் உண்மை விளங்கும். நமக்கு இப் பிறவி நிலைக்கு நாமே காரணமாக இருக்க முடியாது. ஏனெனில் நமக்கு பிறவியெடுப்பதற்கு உரிமை உண்டாயின் துயரற்ற வாழ்வையும் இன்பமே நிலைபெற்றிருக்கக் கூடிய நிலையைப் பெற்றிருப்போம். ஆனால் நம் முன் நிகழ்வதோ இன்பமும் துன்பமும் மாறிமாறி வரக்கூடிய சூழ்நிலை தான். இனிப்பிறவி வேண்டாம் என்று நினைப்போரும் இப்பிறவியிலேயே துன்பமற்ற இன்பவாழ்வு பெற வேண்டும் என்று விழைவோரும் முதலில் இப்பிறப்பினை மனமுவந்து வரவேற்பர்.

'வாய்த்தது நந்தமக்கு ஈது ஓர் பிறவி மதித்திடுமின்' என்றும்,

'இப்பிறவி தப்பிடின் எப்பிறவி வாய்க்குமோ' என்றும் இப்புவியிலேயே, இந்தப்பிறவியிலேயே இறையோடு இசைந்த இன்ப வாழ்வை வாழ முற்படுவதே இப்புறவி எடுத்த தன் நோக்கம் என்பதை மேன்மக்கள் உணர்வர். 'நீ நாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யார் அறிவார் சாநாளும் வாழ்நாளும்' என்பது திருஞானசம்பந்தரின் வாக்கு.

"பால் கறக்கப் பெறாத இளம் பசுவை அதன் கன்று நினைப்பது போல, உனது அடியேனை நான் மறவாமல் என் தலைவனை உன்னையே எப்போதும் அழைக்கின்றேன்; வணங்குகின்றேன். தேன் மிகுந்த சோலைகள் சூழ்ந்த திருநறையூரில் எழுந்தருளியிருக்கும் கல்யாண குண பூர்ணனே! எனக்குத் தந்தையானவனே! என்னை இனி உலகில் பிறவாதபடிச் செய்தருள வேண்டும்." என்று திருமங்கையாழ்வார் பாற்கடலில் பள்ளிகொண்டுள்ள பரந்தாமனை வேண்டுகின்றார். பிறவிப்பயன் என்பது பரம்பொருளை பல்வேறு வடிவங்களில் கண்டு மனம் மொழி மெய்களால் இடையறாது வணங்கி வாழ்த்துவதுதான். அவ்வாறு இல்லையாயின் இப்பிறவியே ஒரு துயரமாகி வருத்தத்தைக் கொடுக்கும். பிறவிலேயே ஒவ்வொருவரும் இறையுணர்வுடன் வருகின்றனர். ஆனால் உலகியலின் வலிமையினால் வலுவிழந்து வாழ்விழந்து குறிக்கோளில்லாது கெட்டு வருந்துகின்றனர். மாணிக்கவாசகர் போன்ற ஞானியரும்,


Dr. R. கோபாலகிருஷ்ணன் M.A. Ph.D.
சென்னை-5.


" சாதிகுலம் பிறப்பு என்னும்
சுழிபட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத்து
ஆட்கொண்டு
பேதை குணம் பிறர் உருவம் யான்
என்று என் உரை மாய்த்துக்
கோதுஇல் அமுதுஆனனைக்
குலாவு வதில்லை கண்டேனே"

என்று எடுத்துக் காட்டுகின்றனர். "மனிதர்கள் வேதங்கள் சொல்லும் படியே நூறு வயது வரை உயிரோடு இருப்பார்களேயானாலும், பாதியான ஐம்பது வயது உறக்கத்தில் கழிந்து விடும். மீதியில் குழந்தை, பாலகன் சிற்றின்பப்பிரியன், வியாதி, பசி, கிழத்தனம் என்று பல பருவங்களாக மாறித் துன்பம் கொடுக்கும். ஆகை



"நெம்மாரா - வல்லங்கி வேலா" திருவிழா காட்சி (பாலக்காடு மாவட்டம்)
திரு: எஸ். ஜி: சேஷகிரி—கோவை.

யால் பிறவி வேண்டேன், அரங்கமா நகர் உளானே'' என்று தொண்டரடிப் பொடியாழ்வார் பிறவி வேண்டாமையின் காரணங்களை விளக்கிக் கூறுகின்றார்.

எனினும் இறையருளில் திளைத்து ஆன்ம நெறியில் நின்று பரம்பொருளின் பல்வேறு நாமங்களை மனமுருகிச்சொன்னால் இப்பிறப்பே இனிமை உடையதாய் மாறும்; இன்னல்கள் நீங்கும். ''வெற்றியைத் தரும் வேலாயுதத்தைக் கையிற் கொண்ட பெருமானும் அடியவர்களுக்கெல்லாம் நல்லனவற்றையே அருளும் நல்ல பெருமானும், அசுரர் குலம் முழுவதும் அழிந்தொழிய பொடியாக்கிய பெருமானும் ஆகிய முருகப் பெருமானின் அழகிய பெயர்களைக் கூறுபவர்கள், ஓய்தலில்லாத பிறவிக் கடலில் புகுந்தழுந்த மாட்டார்கள்; யாவற்றையும் அழிக்க வல்லதான வறுமையால் பூமியில் துன்பப்பட மாட்டார்கள்'' என்பது அருணகிரி நாதரின் அமுத வாக்கு.

புல், பூண்டு, புழு, மரம், பறவை, பாம்பு, கல், மனிதர், தேவர் என்று பல்வகைப் பிறப்பு எடுத்தாலும் இறைவனுடைய திருவடிகளை மானிடப்பிறப்பின் மூலமாகத்தான் கண்டு இன்புற வேண்டும். தனு, கரண, புவன, போகம் என்பனவற்றைப் பரம்பொருள் படைத்ததன் நோக்கமே ஆறறிவு படைத்த மானிட ஆன்மாக்கள் இறையை உணர்ந்து வாழ்த்தி வணங்கி உய்வு பெற வேண்டும் என்பதற்காகத்தான். 'பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டாயின் எம்பெருமானை மறவாமை வேண்டும்' என்றுதான் ஆன்மீக நெறியில் நின்ற ஆன்றோர்கள் வேண்டுகின்றனர்.

மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து
அடியை அடைந்து உள்ளம் தேறி
ஈறில் இன்பத்து இருவெள்ளம்
யான் மூழ்கினன்
பாறிப் பாறி அசுரர் தம்பல் குழாங்கள்
நீறெழப்பாய் பறவையொன்று
ஏறி வீற்றிருந்தாய் உன்னை என்னுள்
நீக்கேல் எந்தாய்!

என்பார் நம்மாழ்வார். 'பிறப்பு மிகவும் இழிவானது என்பதைக் கருதாது உலகத்தில் பிறந்து விட்டால் உயிர் ஓர் உடம்புக்குள் புகுந்து அங்கே தங்கி நோய்வாய்ப்பட இசைந்து மிகவும் தளர்ந்து இறத்தலும் கூடவே இருக்கின்றதே! ஆதலால் நான் பிறப்பினை வெறுக்கின்றேன். திருவாரூர்ப் பெருமானே நல்ல தருமத்தையே விரும்பிய மனமுடையவனாய் ஆசை, பகை, கோபம் இவற்றை நீக்கி உன் வசப்பட்டவனாய் விட்டேன். அடியேனை ஆண்டருள்க' என்று விண்ணப்பம் செய்யும் நாவுக்கரசு சுவாமிகள் பிறிதொரு இடத்தில், 'குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிழ் சிரிப்பும், பனித்த சடையும் பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும் இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால் ஒருவன் மனிதப் பிறவியை விரும்பி ஏற்றுக்கொள்ளலாம்' என்றும் கூறுகின்றார்.

பரம்பொருளின் திருவருளே முன்னின்று பக்குவப்பட்ட ஆன்மாக்களை தன் வயமாக்கி ஆட்கொண்டு பிறப்பிறப்பை நீக்கித் தன்னடிக்குள் வைத்து அருளும். 'சித்தமலமறுத்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்' என்பார் மணிவாசகப் பெருந்தகை.

இறைவனைப் போற்றிப் புகழும் ஞானியர் மானிடரைப் புகழமாட்டார். பிறவியெடுத்ததன் பயன், அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாயிருக்கும் தெய்வத்தை உடம்பினுள்ளே உறு பொருளாக இருப்பதை உணர்ந்து இம்மையில் மண்ணில் நல்லவண்ணம் வாழ்ந்து மறுமையில் திருவடி நிழலில் அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்று வாழ்வது என்பது தான். நம்மாழ்வார் இக்கருத்தை வலியுறுத்திப் பாடுகின்றார்.

வாய் கொண்டு மானிடம் பாடவந்த
கவியேனல்லேன்
ஆய் கொண்ட சீர்வள்ளல் ஆழிப்
பிரான் எனக்கேயுளன்
சாய் கொண்ட விம்மையும் சாதித்து
வானவர் நாட்டையும்
நீ கண்டு கொள்ளென்று வீடும்
தரும் நின்று நின்றே

*



ஸ்ரீ சனீஸ்வர பகவான் கோயில், திருநள்ளார் (காரைக்கால்)
திரு. இரா. கிருஷ்ணமூர்த்தி—கோவை.

# இந்து மதத்தில் பௌத்தக் கொள்கைகள்



இந்தியாவில் பௌத்த மதம் பெரிதும் மறைந்து விட்டாலும், அதனுடைய இறந்த கொள்கைகள் பல இன்றும் இந்து மதத்தில் உயிர் வாழ்ந்து வருகின்றன. அவ்வக் காலத்தில் சிறநது விளங்கிய சில கொள்கைகளை இந்து மதம் சுவீகரித்துக்கொண்டு வளர்ந்து வந்துள்ளது என்று வரலாற்று சான்றுகளால் நிறுவப்பட்டுள்ளன. பண்டைய திராவிடரின் சமயக் கொள்கைகளும், ஜைனரின் கொள்கைகளும் இவ்வாறு ஊடுருவியுள்ளன. இஸ்லாம் மதத்தையும் இந்து மதத்தின் உட்பிரிவுகளில் ஒன்றாகச் சேர்க்க அக்பர் சக்ரவர்த்தி முயற்சி செய்ததால் 'அல்லா உபநிஷத்' இயற்றப்பட்டது என்பதும் நினைவு கூறத்தக்கது.

இக்கால இந்துக்கள் எவையெவை பௌத்தமக் கொள்கைகள் என்ற வித்தியாசத்தை மறந்து விட்டனர். டி. சி. அகிர் (D. C. Ahir) போன்ற, மேல்நாட்டு அறிஞர்கள் பௌத்த மத வீழ்ச்சிக்குக் காரணங்களை ஆராய்ந்துள்ளனர். தமிழில் மயிலை சீனி. வேங்கடசாமி எனும் தமிழறிஞர் 'பௌத்தமும் தமிழும்' என்ற நூலில் இந்து மதத்தில் பௌத்தக் கொள்கைகள் பற்றி விரிவாக விளக்கியுள்ளார்.

புத்த யதம் இந்தியாவில் அழிந்து விட்டாலும், புத்தரை இந்துக்கள் ஒரு அவதாரமாக ஏற்றுக்கொண்டு விட்டனர். புத்தர், திருமாலின் அவதாரங்களில் ஒருவராக ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளார். இதற்கு புத்தரின் உருவ வழிபாடு அக்கால மக்களிடையே வேரூன்றி விட்டதே காரணமெனலாம்.

திரு. கே. சுப்ரமணியன் M.A.M.Phil.,
நகலூர்.

சைவ சமயமும் புத்தரைத் தன் தேவர்களில் ஒருவராக மாற்றிக் கொண்டது. சாஸ்தா அல்லது ஐயனார் என்ற பெயரில் புத்தரைத் தன் தேவர்களில் ஒருவராக இணைத்துக் கொண்டு பின்னர் முருகர் அல்லது சுப்பிரமணியரோடு அதை ஒற்றுமைப்படுத்திக்கொண்டது. புத்தருக்கு தருமராசன் என்றும் விநாயகன் என்றும்கூடப் பெயர்கள் உள்ளதை நிகண்டுகளில் காண முடிகிறது. தருமராசன் என்ற பெயரில் இருந்த பௌத்தக் கோயில்கள் பிற்காலத்தில், பாரதத்தில் வரும் பஞ்ச பாண்டவரில் மூத்தவரான தருமபுத்திரனின் கோயில்களாக மாற்றப்பட்டன. அது போலவே விநாயகன் எனும் பெயரில் இருந்த புத்தர் கோயில்களை விநாயகர் (பிள்ளையார்) கோயிலாக மாற்றி விட்டனர் என்பர் ஆய்வாளர்கள். துடித லோகத்தில் வீற்றிருந்த அவலோகிதர் எனப்படும் போதி சத்துவர், புத்த

ராக மாயாதேவியின் திருவயிற்றில் வந்து அமர்ந்தபோது, வெள்ளை யானைக்கன்று உருவமாக வந்தார் என்று பௌத்த நூல்கள் கூறுகின்றன. யானை உருவமும் பிள்ளையாரின் யானை முகமும் ஒற்றுமையுடையது என்பது காணத்தக்கது. பழைய சைவ சமயத்தில் பிள்ளையார் வழிபாடு இல்லையென்றும் கி. பி. 6-ம் நூற்றாண்டுக்கு பின்தான் அது புகுத்தப்பட்டது என்றும் மறைமலையடிகள் போன்றோர் கூறியுள்ளது இங்குக் கவனத்துக்குரியது.

பண்டைக்கால பௌத்தர்கள் மணிமேகலை, சம்பாபதி, தாராதேவி போன்ற சிறு தெய்வங்களை வணங்கி வந்தனர். இக்கோயில்கள் பிற்காலத்தில் காளி, பிடாரி, திரௌபதியம்மன் எனும் கிராம தேவதைகளாக மாற்றப்பட்டன என்பர். காஞ்சியில் வீடுபேறடைந்த மணிமேகலையின் ஆலயந்தான், அன்னபூரணி அம்மன் ஆலயம் (இது காஞ்சி காமாட்சியம்மன் ஆலயத்தில் உள்ளது) என்றும், காஞ்சி காமாட்சி ஆலயம் பௌத்தரின் தாரா தேவியம்மன் கோவில் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அவ்வாறே காஞ்சியில் திரௌபதியம்மன் ஆலயம் என்ற பெயரில் இருப்பவை பண்டைக்கால தாரா தேவியாலயங்களாக இருந்தவை என்பர்.

யாகங்களில் ஆடு மாடு குதிரை போன்றவற்றைப் பலியிடுவது அக்கால வைதீக மதத்தின் வழக்கம். இவ்வாறு கொல்வது பாவம் என்பது பௌத்தக் கோட்பாடு. இக்கொல்லாமைக் கொள்கையை பிற்காலத்தில் இந்து மதம் ஏற்றுக்கொண்டது. உயிர்க் கொலையைத் தடுத்து, மாமிசம் உண்பதைத் தடுத்ததில் பௌத்த மதத்திற்கும் பெரும் பங்கு உண்டு.

'போதி' எனப்படும் அரச மரம் பௌத்தர்களுக்குப் புனிதமானது. புத்தர் ஞானம் பெற்றது போதி மரத்தடியில்தான். புத்தரைப் பற்றிக் கூறும்போது 'மருள் அறுத்த பெரும் போதி மாதவன்; பவளச் செஞ்சுடர் மரகதப் பாசடை பசும்பொன் மாச்சினை விசும்பகம் புதைக்கும் போதியற் திருநிழல் புனிதன்; வாடாப் போதி மரகதப் பாசடை மரிநிழல் அமர்ந்தோன் பாசடைப் போதிப் பேரருள் வாமன்' என்று இலக்கியங்கள் புகழ்கின்றன. பௌத்தரை 'போதியர்' என்று தேவாரம் கூறும். சங்க காலப் புலவர் ஒருவர் 'இளம் போதியர்' என்ற பெயரில் இருந்தார். 'புத்தர் மேல் பத்திக்குக் காரணமான போதி விருட்சம் நின்னால் (பௌத்தரால்) புத்தஞபோதி (புத்த சம்பந்தமானது) என்று தொழப்பட்டவாறு' என்று நீலகேசி உரைப்பகுதியும் கூறுகிறது. இந்து மதத்தில் இன்றளவும் அரச மரத்தைத் தொழுது வருவது பௌத்தத் தொடர்பால் வந்ததேயாகும்.

சைவ, வைணவ, ஸ்மார்த்த மதத்தினர் மடங்களை ஏற்படுத்தி சமயத்தைப் பரப்பி வந்துள்ளனர். இவை பௌத்தப் பள்ளிகளைப் பின்பற்றி அமைக்கப்பட்டவைகளாகும். பௌத்த மதத்தின் உயிர் நாடி சங்கம் (சங்கம் சரணம் கச்சாமி) ஆகும். பௌத்த துறவிகளின் கூட்டமே சங்கம். இவர்கள் ஊர்தோறும் விகாரைகளை (மடங்கள்) அமைத்து மக்களுக்கு உதவி வந்தனர். பௌத்தருக்கு முன் துறவிகளும், சமயத் தலைவர்களும் காடுகள், மரச்சோலைகள் முதலியவற்றிலேயே வசித்து வந்தனர். பின்னர் தான் மடங்கள் உருவாயின.

கி. பி; 9-ம் நூற்றாண்டின் முன் பகுதியில் சங்கரரால் உண்டாக்கப்பட்ட அத்வைத மதத்தின் அடிப்படைக் கொள்கை மகாயான பௌத்த மதத்திலிருந்து ஏற்றுக்கொள்ளப்பட்டதே என்று ஆய்வாளர் கருதுகின்றனர். இம்மதம் 'மாயாவாத மதம்' 'ஏகான்மவாத மதம்', 'ஸ்மார்த்த மதம்' என்றும் அழைக்கப்படும். சங்கராசாரியார், பௌத்த குரு ஒருவரிடம் பயின்றவர் என்பர் சிலர். வேறு சிலர், கோவிந்த பாதர் என்பவரே சங்கரரின் குரு என்பர். கோவிந்த பாதரின் குரு, கௌட பாதர் எனும்

(32-ம் பக்கம் பார்க்க



கைலாசநாதர் கோயில் - சுதை மண்சிற்பம், துவாரபாலகர் - காஞ்சிபுரம்.
திரு. எல். ஜி. சேஷகிரி-கோவை

# திருமால் வழங்கிய நூல்

திரு. புலவர். பெ. கிருஷ்ணராஜன், M.A.,
சேலம்.

மக்களின் இன்றியமையாத தேவைகள் மூன்று. அவை உணவு, உடை, இருப்பிடம் என்பன. இந்த மூன்றிலும் முக்கியமானது எது? சிந்திக்க வேண்டிய கேள்வி இது. நம் நாட்டு மக்களில் பலர், பல சந்தர்ப்பங் களில் ஒரு வேளை உணவு கூட இல்லாமல் இருக்கிறார்கள். அதற்காக அவர்களை யாரும் பழிப்பது இல்லை; தெருவோரத்தில் குடியிருந்து காலம் கழிப்பவர் பலர். சொந்த வீடு இல்லாததற்காக இவர்களை யாரும் குறை சொல்லுவது இல்லை.

உணவும் இருப்பிடமும் கூட இல்லாமல் ஒருவன் இருந்து விடலாம். ஆனால் ஆடையில்லாமல் ஒருவன் இருக்கலாமா? கூடாது. ஆடையில்லாமல் திரிபவனைப் "பைத்தியம்" என்றல்லவா கேலி செய்வார்கள்?

மானத்தைக் காப்பது மட்டுமல்ல, மனிதனுக்கு மரியாதையைத் தேடிக் கொடுப்பதும் ஆடைதான். ஆள்பாதி ஆடைபாதி, என்னும் பழமொழி இதனை வற்புறுத்தும்.

நல்ல ஆடைகளை அணிந்திருப்பவர்களுக்கு வரவேற்பும், அத்தகைய ஆடைகளை அணியாதவர்களுக்கு அவமரியாதையும் ஏற்படுவதை நாம் பல இடங்களில் பார்த்திருக்கிறோம். கடவுளரில் கூட, திருமால் பட்டாடை அணிந்து இருந்ததால்தான் பாற்கடல் அவருக்குத் திருமகளைக் கொடுத்ததாம்; சிவபெருமான் புலித்தோலை உடுத்தியிருந்ததால், அதே பாற்கடல் அவருக்கு ஆலகால விஷத்தைக் கொடுத்ததாம்.

''மேலாடை யின்றிச் சபைபுகுந்தால்
இந்த மேதினியோர்
நூலாயி ரம்படித் தாலும்எண்
ணார்நுவல் பாற்கடலோ
மாலான வன்அணி பொன்னுடை
கண்டு மகளைத்தந்தே
ஆலாலம் ஈந்தது தோலாடை சுற்றும்
அரன்தனக்கே.'

ஆடையின் பெருமையை இந்த அழகிய பாட்டால் உணர்த்துபவர் நையாண்டிப் புலவர். கடவுளர்க்கே இந்த நிலை என்றால், நல்ல ஆடைகள் இல்லாவிட்டால் மனிதர்களுக்கு மதிப்பும் மரியாதையும் ஏது?

மானத்தைக் காத்து நம் மதிப்பை உயர்த்தும் ஆடை பிறந்த கதையைத் தேவாங்க புராணம் கூறுகிறது. பதினெண் புராணங்களில் ஒன்றான பிரம்மாண்ட புராணத்தின் உத்தரகாண்டத்தில் தேவாங்கபுராணம் என்னும் பகுதி காணப்படுகிறது. முதன்முதலில் வடமொழியில் எழுதப்பட்ட தேவாங்கபுராணம், பிற்காலத்தில் தெலுங்கு, கன்னடம், தமிழ் முதலிய பல மொழிகளில் எழுதப்பட்டது. மாம்பழக் கவிச்சிங்க நாவலர் என்னும் புலவர் இதனைத் தமிழில் செய்யுள் வடிவில் ஆக்கியுள்ளார்.

நம் நாட்டில் வாழும் பல இனத்தவர்களில் தேவாங்கர் என்பவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். 'ஆதியில் நெசவுத்தொழிலைச் செய்து அனைவருக்கும் ஆடைகளை வழங்கியவர்கள் இவர்களே' என்று தேவாங்க புராணம் கூறுகிறது. தமிழ் நாட்டிலும், தென்னிந்தியாவின் வேறு பல மாநிலங்களிலும் தேவாங்கர்கள் இன்றும் நெசவுத் தொழிலைச்செய்து வருவதை நாம் காணலாம்.

தேவாங்கர்களின் முதல் மகன் தேவலமுனிவர் என்று புராணம் கூறுகிறது. ஆடையில்லாமல் மக்கள் வாழ்ந்த காலத்தில் அவர்களுக்கு ஆடைகளை நெய்து தருவதற்காகச் சிவபெருமான் இவரைத் தம் இதயக் கமலத்தினின்றும் தோற்றுவித்தார் என்று அதில் சொல்லப்பட்டுள்ளது.

தம்மைப் படைத்த இறைவனை நோக்கி, "நான் யாது செய்யவேண்டும்?'' என்று தேவல முனிவர் பணிவுடன் வினவினார். அப்போது சிவபெருமான், "ஆடைகளை நெய்து கொடுத்து அனைவருடைய மானத்தையும் காப்பதற்காக உம்மைப் படைத்தோம். நீ இப்போது திருப்பாற்கடலுக்குச் சென்று ஆங்கு ஆதிசேடன்மீது அறிதுயில் கொள்ளும் திருமாலைக் காண்பாயாக. அவரிடம் நீ செய்யப்போகும் கடமையைத் தெரிவித்து, அவரது உந்தித் தாமரை நூலைப் பெற்றுப் பலவித ஆடைகளை நெய்வாயாக. அவைகளைப் பலருக்கும் கொடுத்து உதவி செய்வாயாக!'' என்று சொல்லி அனுப்பினார்.

உமா மகேசுவரரின் அருள்பெற்ற தேவலமுனிவர் திருப்பாற்கடலை நோக்கிப் பயணம் செய்தார். பாற்கடலுக்கு அருகிலிருந்த கருடாசிரமத்தில் தங்கினார். 'வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை மெத்தையாக விரித்து அதன் மேலே, கள்ள நித்திரை கொள்கின்ற கண்ணனை நினைத்துப் பல நாட்கள் தவம் செய்தார். ''மாலே! நெடியோனே! விண்ணவர்க்கு மேலா வியன்துழாய்க் கண்ணியனே! ஞாலம் அளந்தவனே! ஆல்மேல் வளர்ந்தவனே! அரவணைப் பரமனே! விரைந்து அருள் செய்ய வேண்டும்'' எனப் பலவாறு துதித்துத் தவமியற்றினார்.

அன்பரின் அன்புக்கு எளியவனாகும் திருமால் தேவலமுனிவரின் உறுதி

மிக்க நெடுந்தவத்திற்கு மகிழ்ந்தார்: அவருக்குக் காட்சியளித்து, ''புனிதனே! உனது தவத்தைக் கண்டு மனம் நெகிழ்ந்தோம். ஆதலால் உனக்கு விருப்பமான வரத்தைக்கேள், தருகிறோம்'' என்றார். சிவபெருமான் இட்ட கட்டளையைத் தேவலமுனிவர் திருமாலிடம் தெரிவித்தார்: மக்களின் மானத்தைக் காக்க ஆடைகள் நெய்ய இருப்பதாகவும், அதற்கு அவருடைய உந்தித் தாமரை நூல்வேண்டும் என்றும் கேட்டார்.

அதனைக் கேட்ட திருமால் உலகம் தொடங்கிய காலம் முதற்கொண்டு தாம் தமது உந்தித் தாமரை நூலைக் காப்பாற்றி வந்துள்ளதாகவும், அது பயனடையும் காலம் வந்துவிட்டதென்றும், அந்த நூலைக் கொண்டு ஆடைகள் நெய்து தேவர் மக்கள் முதலிய அனைவர்க்கும் உதவி செய்க என்றும் கூறி நூலைக் கொடுத்தார்.

என, மகிழ் சிறந்து மால்தன்
இலஞ்சியங் கமலத் துற்ற
பனுவல்தந் திதனுல் நீயப்
பண்ணவர் ஏனோர் யார்க்கும்
புனைபல அம்பரங்கள் புரிந்து
நாண் புரத்தி என்றே
கனிவுறு கருணை செய்து
கலுழனூர்ந் தினிது சென்றான்.
(மாம்பழக் கவி)

திருமால் அளித்த நூலைத் தேவல முனிவர் பெற்றுச் சென்று ஆடைகள் நெய்து மக்களுக்கும் தேவர்களுக்கும் வழங்கினர்.

தேவல முனிவர் நெய்து கொடுத்த ஆடைகள் தேவர்களின் அங்கங்களை அலங்கரித்ததால் அவருக்குத் தேவாங்கன் என்னும் பெயர் ஏற்பட்டது என்றும், அவர் வழி வந்தவர்கள் தேவாங்கர் என்னும் இனத்தார் என்றும் தேவாங்கபுராணம் கூறுகிறது.

இவ்வாறு, காக்கும் கடவுளாகிய திருமால் தம் நாபிக் கமலநூலைத் தேவல முனிவருக்கு வழங்கி மக்கள் ஆடை பெற்று மானம் காத்திட வழி செய்தார் என அறிகிறோம்.

○

---

30-ம் பக்கத் தொடர்ச்சி

பௌத்தர். மேலும் பௌத்த மதத்தின் பிரிவுகளான விஞ்ஞான வாத, சூனிய வாத மதங்கள் அதிகமாகப் பரவியிருந்த சௌராஷ்டிர தேசத்தில் சங்கரர் கல்வி பயின்றார் என்றும் அதனுல் சூனிய வாதத்தினின்றும் மாயாவாதத்தைப் பெற்றார் என்றும் ஒரு கருத்துண்டு. வைணவ ஆசாரியாருள் தலைசிறந்தவரும், ஸ்ரீ பாஷ்யம் அருளிச் செய்தவருமான இராமாநுசர், சங்கரரின் அத்வைத மதத்தை பிரச்சன்ன பௌத்தம் (மாறு வேடம் பூண்டு வந்த பௌத்தம்) என்று அழைக்கிறார். துவைத மதத் தலைவரான மாத்வாசாரியாரும் அவ்வாறே குறிப்பிடுகிறார்; பதும புராணத்தின் உத்தர காண்டத்திலும் இதையேகாணமுடிகிறது.

பௌத்தருக்குரிய புத்த ஜாதகக் கதைகள் புத்தருடைய பழம் பிறப்புக்களைக் கூறுகின்றன. அவற்றில் ஹம்ச ஜாதகம் ஒன்று. புத்தர், அன்னப் பறவையாகப் பிறந்து அரசனுக்கும் மக்களுக்கும் அறநெறி உரைத்தார் என்று அதில் கூறப்படுகிறது. இக்கதை, மகா ஹம்ச ஜாதகம், (சிறிய) ஹம்ச ஜாதகம், ஹம்ச ஜாதகம் என்று மூன்று கதைகளில் கூறப்படுகிறது. புத்தரைத் திருமாலின் அவதாரமாக ஏற்றுக் கொண்ட வைணவர்கள் இந்த ஹம்ச ஜாதக் கதையினையும் ஏற்றுக் கொண்டு, திருமால் அன்னப் பறவையாகப் பிறந்து அறமுரைத்தார் என்று கூறுவர். திருமங்கை ஆழ்வார் மட்டும் இக்கதையைத் தம் பாசுரங்களில் குறிப்பிட்டுள்ளார்.

துன்னிமண்ணும் விண்ணாடும்
தோன்றாது இருளாய் மூடிய நாள்
அன்னமாகி அருமறைகள்
அருளிச் செய்த அமலன்.

அன்னமாய் அன்று அங்கருமறை
பயந்தான்
அரங்கமா நகர் அமர்ந்தானே.

முன்னுலகங்களேழும் இருள் மண்டி
யுண்ண
முதலோடு வீடு மறியாது
என்னிதி? வந்ததென்ன இமையோர்
திகைப்ப
எழில் வேத மின்றி மறைய
பின்னும் வானவர்க்கும் முனி
வர்க்கும் நல்கி
இருள் தீர்ந்து இவ்வையம் மகிழ
அன்னமதாயிருந்து அங்கற
நூலுரைத்த
அது நம்மை யாளும் அரசே.

மின்னுமாமழை தவழும் மேக
வண்ணா!
விண்ணவர் தம் பெருமானே!
அருளாயென்று
அன்னமாய் முனிவரோடு அமரரேத்த
அருமறையை வெளிப்படுத்த
அம்மான் தன்னை.

என்ற பாசுரங்கள் இவைகளாகும். இன்னும் பல இடங்களில் திருமங்கையாழ்வார் ஹம்ச ஜாதகத்தைக் கூறுகிறார்.

மேற்கூறிய உதாரணங்களால் பௌத்த மதக் கொள்கைகள் இந்து மதத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டு இன்றளவும் உயிர் பெற்றிருக்கின்றன என்பதை உணர முடிகிறது. இதனுல் பௌத்தக் கொள்கைகளின் சிறப்பும் விளங்குகிறது. இந்து மதம் பௌத்த மதத்தை அழித்து விட்டது; ஆனுல் பௌத்தக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டு விட்டது. வேறு வழியற்றே இச்சிறப்பு நிறைவேறியுள்ளது. பௌத்த மதம் தோல்வியுற்றது. ஆனுல் அதன் கொள்கை வெற்றி பெற்றது.

இன்றளவும் உலக அறிஞர்களிடையே அதிகச் செல்வாக்கை வகிப்பது பௌத்தக் கொள்கைகளே யாகும். அதிகப் பேர் பின்பற்றும் மதங்களில் ஒன்றாக விளங்கி உலக மதமாகவும் நிலைபெற்றுள்ளது. 'ஜென் பௌத்தம்' அல்லது 'தியான பௌத்தம்' இன்று பல அறிஞர்களின் கருத்தைக் கவர்ந்து சிறப்பிடம் பெற்று வருவது ஆராய்ச்சிக்குரிய விஷயமாகும்.

★

# பாவையின் சரணாகதி

திரு. கே. வி. ஸ்ரீநிவாசன்,
சென்னை.

வைஷ்ணவர் ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ளவேண்டிய முக்கிய மான விஷயங்கள் ஐந்து என்று நம் பெரியோர்கள் கூறுவர். இதனை அர்த்த பஞ்சகம் என்கின்றனர். அவையாவன:

1. ஸஸ்வரூபம்=நான் என்னும் ஜீவனின் தன்மை.

2. பரஸ்வரூபம்=நம்மைப் படைத்து ரக்ஷிக்கும் ஈஸ்வரனின் தன்மை

3. உபாயஸ்வரூபம்=ஜீவன் அந்த ஈஸ்வரனை அடையவழி

4. பலஸ்வரூபம்=அவனை நாம் அடைவதுதான், அதனால் ஏற்படும் பிரயோஜனம். இதை புருஷார்த்தஸ்வரூபம் என்றும் சொல்வதுண்டு.

5. விரோதிஸ்வரூபம்=நாம் அடையாமலிருப்பதற்கான தடை;

ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம்
ப்ராப்து: ச ப்ரத்யகாத்மந:।
ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தே:
ததா ப்ராப்தி விரோதி ச॥
வதந்தி ஸகலா வேதா:
ஸேதிஹாஸ புராணகா:
முநய: ச மஹாத்மானோ
வேத வேதாந்த வேதி ந:॥

என்பது ஹாரீத ஸ்ம்ருதி.

இதன் பொருள்: அடையத்தக்க பிரம்மத்தினுடைய ஸ்வரூபத்தையும் அடைபவனுகிற ஜீவனுடைய ஸ்வரூபத்தையும், அடைகிறதற்கேற்ற உபாயஸ்வரூபத்தையும், அடைந்ததற்குப் பலனான தன் ஸ்வரூபத்தையும், அப்படி அடைவதற்கு விரோதியாயிருப்பதின் ஸ்வரூபத்தையும், இதிஹாஸ புராணங்களுடன் கூடிய எல்லா வேதங்களும், மஹரிஷிகளும் சொல்கின்றனர்.

ஜீவாத்மஸ்வரூபமும், பரமாத்மஸ்வரூபமும் ஒன்றையொன்று அநுஸரித்தேயிருக்கின்றன. உபாயஸ்வரூபம்: பரமாத்மாவை அடைவதற்கு, நமக்கும், அவனுக்கும் ஏதாவதொரு ஸம்பந்தத்தை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். பூர்வாசாரியர்கள் நவவித ஸம்பந்தம் கூறுவர்.

1. பிதாபுத்ரஸம்பந்தம்: அவனைத் தகப்பனாகவும், நம்மை அவர் குழந்தைகளாகவும் பாவித்து நடத்தல். எப்படி பூனையானது, தனது குட்டிக்கு ஏதாவது ஆபத்து வரும்போல் தோன்றினால், அதைத் தானே கவ்விக் கொண்டு வேறு ஒரு பத்திரமான இடத்தில் வைக்கின்றதோ, அதேபோல் பகவான் தன் புத்திரர்களாகிய ஜீவன்களை தானே வந்து ரக்ஷிக்கிறானென்றுக் கூறுகின்றனர். இதை மார்ஜாலா கிசோப நியாயமென்றும் கூறுவர். சேதனன் எம்பெருமானைப் பிரார்த்தித்து அவனை அடைவதற்கு மர்கடகிசோர நியாயம் என்று கூறுகின்றனர். மர்கடகமென்பது குரங்கு. அது தன் குட்டியைத் தன்னைக் கட்டிக் கொள்ளச் செய்து எடுத்துப் போகும். குட்டி தாயை விட்டு விட்டால் கீழே விழக்கூடும்.

2. ரக்ஷ்ய ரக்ஷக ஸம்பந்தம்-நாம் காப்பாற்றப்படுபவர்கள். அவன் காப்பாற்றுபவன். அவன் நம்மை காப்பாற்றக் கடமைப்பட்டவன். களைகண் மற்றிலேன் என, அவன் ரக்ஷகத்தை எதிர்நோக்கி ஜீவனிருப்பான்.

3. சேஷசேஷி ஸம்பந்தம்-அவன் சேஷி எஜமானன். நாம் சேஷர். அவனுக்குத் தொண்டு செய்யக் கடமைப்பட்டவர்கள். பகவானுக்குத் தொண்டு செய்வதும், பாகவதர்களுக்குத் தொண்டு செய்வதும் ஒன்றே. தொண்டரடிப்பொடி ஆழ்வார், லக்ஷ்மணன் முதலியோர் பகவானுக்குத் தொண்டு செய்து மேன்மை பெற்றவர்கள். மதுரகவி ஆழ்வார், சத்ருக்னன் பாகவத கைங்கர்யம் செய்து நலமடைந்தவர்கள்.

4. பர்த்ரு பார்யா ஸம்பந்தம்—இது நாயகநாயகிபாவம். பகவானே புருஷன் மற்றைய ஜீவன்கள் யாவும் ஸ்த்ரீப்ராயர்களே. ஸகர்வ சிரேஷ புருஷ: என்று புருஷஸூக்தம் கூறும்.

5. ஜ்ஞாத்ரு ஜ்ஞேய ஸம்பந்தம்: அறிபவன் ஜீவன். அறியப்படுபவன் ஈஸ்வரன்.

6. ஸ்வ ஸ்வாமி பாவ ஸம்பந்தம்—நான் அவனது சொத்து. அது ஈஸ்வரனுக்கே உரியது என்ற மனோபாவம்.

7. சரீர சரீரி ஸம்பந்தம்—ஜீவன் யாவும் உடல் ஈஸ்வரனே, அவ்வுடல்களின் ஆத்மா.

8. ஆதார ஆதேய ஸம்பந்தம்—தரிப்பது, தரிக்கப்படுவது. எம்பெருமான் சரீரத்தில் அந்தர்யாமியாயிருந்து, அதை நாசமடையாமல் நிலைக்கச் செய்கிறான்.

9. போக்த்ரு போக்த்தா ஸம்பந்தம் — நாம் அனுபவிக்கப்படுபவர், அவன் நம்மை அனுபவிப்பவன்.

மேலும், அவனை நண்பனாகவும் பாவிப்பதுண்டு, நாயக நாயகிபாவம் என்பது ஸ்ரீமந்நாராயணனை, அவனே புருஷன் என்று எண்ணுவது. புருஷன் என்றால் பிறருக்குக் கட்டுப்படாது ஸ்வதந்திரனாயிருந்து, பிறரை ஆளுபவன் என்று பொருள். மஹாலக்ஷ்மி கூட அவனுக்குப் பாரதந்த்ரையே. இராமாயணத்தில் சீதாபிராட்டி, தன் கற்பின் மகிமையால் இராவணனைக் கொளுத்தச் சக்தியிருந்தும், அது தன் பாரதந்த்ரய ஸ்வரூபத்

திற்கு இழுக்கு, இராமனது பெருமைக்கும் இழுக்கு என்றெண்ணி அவ்விதம் செய்யவில்லை. ஆழ்வார்கள், அவனது திவ்விய மங்கள விக்கிரஹத்திற்கும், கல்யாண குணங்களுக்கும் மகிழ்ந்து பெண்மை பூண்டனர். ஆணுயிருந்தாலும் அல்லது பெண்ணுக இருந்தாலும், யாவரும் பகவானுக்குப் பாரதந்த்ரிகமுள்ள ஸ்திரீகளே.

புஷ்பேஷு ஜாதீ
புருஷேஷு விஷ்ணு:
நாரீஷு ரம்பா
நகரேஷு காஞ்சீ

என்பது பெரியோர்கள் கூற்று.

நாயக நாயகி பாவம் — நாயகி தன் உடல், பொருள், ஆவி யாவும் ஒளிவு மறைவின்றி நாயகனிடம் ஒப்புவித்து, அவனில்லாவிட்டால் எந்த மங்கள காரியத்திற்கும் தான் அருகதையற்றவர்களென்று எண்ணுபவள். நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பராங்குச பரகால நாயகிகளாக மாறிக் காதல் மிகுந்து, பிரிவு தாங்காது, நாயகியாகவும், நாயகியின் தாயாகவும், பல பாசுரங்கள் பாடியது மனதைக் கவர்வதாகும். பராங்குசநாயகி பாடுகிறாள்:

'' கங்குலும் பகலும் கண்டுயிலறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்
சங்குசக்கரங்களென்றுகை கூப்பும்
தாமரைக்கண் ணென்றேதளரும்
எங்ஙனே தரிக்கேனுன்னை
விட்டென்னும்
இருநிலம் கைதுழாவிருக்கும்
செங்கயல் பாய் நீர்த்திருவரங்கத்தாய்
இவள் திறத்தென் செய்கின்றுயே''

என்று தாயார், நாயகியின் கஷ்டத்தைப் பார்த்து முறையிடுவதாக நம்மாழ்வார், 7-ம் பத்து 2 ம் திருவாய் மொழியில் கதறுகிறார். அப்பத்துப் பாசுரங்களும் மனதைக் கவரும்.

.மாகீண்டகைத்தலத்தென்
மைந்தாவென்றும்
சொல்லெடுத்துத் தன் கிளியைச்
சொல்லேயென்று
துணைமுலை மேல் துளிசோரச்
சோர்கின்றாளே ''
*திருநெடுந்தாண்டகம்* — 13

மஞ்சுறு மாலிருஞ்சோலை
நின்ற மணாளனார்
நெஞ்சம் நிறைகொண்டு
போயினார் நினைகின்றிலர்
வெஞ்சுடர் போய்விடியாமல்
எவ்விடம் புக்கதோ
நஞ்சுடலந்துயின்றால் நமக்கினி
நல்லதே.
*பெரிய திருமொழி* 11-2-8

ஆண்களாகிய ஆழ்வார்கள், அவனழகிலும், குணங்களிலும், ஈடுபட்டுக் காமுற்று, பெண்மை பூண வேண்டியிருந்தது. பெரியாழ்வார் வளர்த்த பொற்கொடிக்கோ இவ்வித மாற்றம் வேண்டியதில்லை. நினைவு தெரிந்த நாள் முதலே கண்ணனைக் காமுற்றாள். அவனுக்காக வைத்திருந்த மாலைகளை அணிந்து, அழகு பார்த்துக் களித்துக் களைந்து வைத்தாள். இதை ஒருநாள் பார்த்துவிட்ட பெரியாழ்வார் அன்று முழுதும் வருந்தி, மாலையை எம்பெருமானுக்குச் சாத்தாது இருக்க எம்பெருமானே, அவள் சூடிக்களைந்த மாலைகளே தாமுகக்கு மாலையென, ஆழ்வாருக்குத் தெரிவிக்க, அவ்விதமே ஆழ்வாரும் அனுதினமும் அரங்கன் ஆஞ்ஞைப்படி இவள் சூடிக் கொடுத்த மாலையை எம்பெருமானுக்கு சாற்றினார். கோதை, சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாளுள். இவளுக்கு மணப்பருவம் வர, ஆழ்வார் மணமகனைத் தேட, இவள்,

'' வானிடை வாழுமவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில்
வகுத்தவவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும
செய்வதொப்ப,
ஊனிடை யாழி சங்குத்தமர்க்கென்று
உன்னித் தெழுந்த வென்தட
முலைகள்
மானிடவர்க்கென்று பேச்சிப்படில்
வாழகில்லேன் கண்டாய்
மன்மதனே ''
*நாச்சியார் திருமொழி* — 1-5

என்றாள்.

அவனை அடைய கோபியர்கள் நோன்பு நோற்றார்களென்று, பெரியோர்களால் கேட்டறிந்த கோதைப் பிராட்டியார், வில்லிப்புத்தூரையே ஆயர்பாடியாகவும், வடபெருங் கோயிலானையே கண்ணனுகவும், அக்கோயிலையே நந்த கோபன் திருமாளிகையாகவும், தன்னையும், தன் தோழிகளையும் கோபியர்களாகவும் மாற்றுகின்றாள். மார்கழித் திருப்பாவை தோன்றிற்று. ''தையொரு திங்களும்'', என்று தொடங்கி காமனைத் தொழுகிறாள். கை கூடவில்லை. அவன் வரவுமில்லை. குயில்களிடம் தூது சொல்கிறாள். இரக்கம் கொண்ட எம்பிரான் அவள் கனவில் தோன்றி வாரணமாயிரம் சூழ வலம் வந்து காட்சியளித்தான். தேவர்குழாமெல்லாம் வந்து மகட் பேச, மணமாலை சூட்டிக் கோடியுடுத்தி, மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றூத, முத்துடைத்தாமரை தாழ்ந்த பந்தற்கீழ் மதுசூதன் வந்து, கைத்தலம் பற்றித் தீவலம் செய்து, அம்மி மிதித்து, பொரி முகம் தட்டப்பட்டு, மங்கல வீதியில் மணத் தம்பதிகள் கோலாகலமாக வலம் வந்து மஞ்ஜனமாடி மணம் முடிகிறது.

மறுநாள், தான் கண்ட கனவைத் தன் தோழிகளிடம் சொல்லிச் சொல்லி மகிழ்கிறாள். மறுபடியும் விரஹ தாபம். வெண்சங்கைக் கூவி அவன் திருப்பவள வாயின் சுவையைப் பற்றிக் கூறுகிறாள். பூவையும், குயிலையும், மயிலையும், மழையையும், கடலையும் தூது போக வேண்டுகிறாள்.

பெண்ணின் வருத்தம் அறிந்த கண்ணனின் பீதக வாடையைக் கொணர்ந்து, தன் வாட்டம் தணிய வீசச் சொல்கிறாள். 'அவன் அணிந்த வனமாலையைச் சூட்டுங்கள். அவன் அமுத வாயிற்றூறிய நீரைக் கொணர்ந்து பருக அளியுங்கள். அவனடிப்பொடிகள் கொணர்ந்து பூசுங்கள்' என்று கதறுகின்றாள்.

மாசியும் கடந்தது. இவள் விரஹ தாபம் திருவரங்கத்துப் பாம்பணை யானைத் தகித்தது. அவன் பெரியாழ்வார், கோயில் அதிகாரிகள் கனவில் தோன்றி, இவளை அழைத்து வரும்படி கூறுகின்றான். அவ்விதமே அவர்களும், கோதையைப் பொற்சிவிகையில் எழுந்தருளப் பண்ணி, பெரியபெருமாள் முன் விட, இவளை அரங்கன் ஏற்று, ஐக்கியமாக்கிக் கொள்கிறான். இவள் பிரியாமையைப் பற்றி பெரியாழ்வார் வருந்துகிறார். அவரது பாடலைப் பார்ப்போம்:

'' காறை பூணும், கண்ணாடி
காணும் தன் கையில் வளை
குலுக்கும்
கூறையுடுக்கும், மயர்க்கும் தன்
கொவ்வைச் செவ்வாய் திருத்தும்
தேறித் தேறி நின்றாயிரம் பேர்த்
தேவன் திறம் பிதற்றும்
மாறில் மாமணி வண்ணன்
மேலிவள் மாலுறுகின்றாளே '':
*பெரியாழ்வார் திருமொழி 3-7-8.*

இவரது பிரலாபத்தைக் கேட்ட அரங்கன், இவருக்கும் தம் கல்யாணக் காட்சியை முழுவதுமாகக் கனவில் காட்டி மகிழ்வித்தார்.

எம்பெருமானை அடைய, ஐந்து வழிகளைப் பெரியோர்கள் வகுத்திருக்கிறார்கள். கர்மமும், பக்தியும் நேராக மோக்ஷத்திற்கு உதவாதென்றும், அவைகள் பக்தி மார்க்கத்திற்குச் சாதனங்களே ஆகும் என்றும், பக்தியும் பிரபத்தியுமே மோக்ஷத்தைக் கொடுக்கவல்லது என்றும் கூறுவர். கர்மத்தைப் பகவத் பிரீதிக்காகவே செய்ய வேண்டும். அவற்றின் பலாபலன்களுடன் நமக்குச் சம்பந்தமில்லை. பற்றற்று செய்யும் கர்மங்களே மோக்ஷத்தை அளிக்கும். நம்மாழ்வார் கூறுவார்: ''அற்றது பற்றெனில், உற்றது வீடு''. அர்ஜுனனுக்குக் கண்ணன், போர் புரிவது அவன் கடமை என்றும், அதை விடுவது அதர்மம் என்றும் சொன்னார்.

### தி. தி. தேவஸ்தானத்தாரின்

# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ.6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-00 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

## வெள்ளிக்கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ.2/. நபர் ஒருவருக்கு) |

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

**ஆர்ஜித நைவேத்தியங்கள்**

| | | | |
|---|---|---|---|
| (அ) | பொங்கல் | | ரூ. 55/- |
| (ஆ) | புளியோரை | ,, | ரூ. 50/- |
| (இ) | தத்யோதனம் | ,, | ரூ. 40/- |
| (ஈ) | கேஸரிபாத் | ,, | ரூ. 85/- |
| (உ) | சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 65/- |
| (ஊ) | தோசை | ,, | ரூ. 35/- |
| (எ) | ஸாகரபாத் | ,, | ரூ. 90/- |
| (ஏ) | ஸீரா | ,, | ரூ.155/- |

**ஆர்ஜித சேவைகள்**

(அ) திருச்சி உற்சவம் ரூ. 63-00
(ஆ) யானை வாகனம் ரூ. 32-00
(இ) தோலோற்சவம் ரூ. 150/- (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்)
(ஈ) திருப்பாவாடை ரூ. 2000/- (கிருஹஸ்தர்க்கு 5 கிராம எடையுள்ள வெள்ளி டாலர் கொடுக்கப்படும்)
(அர்ச்சனை (அஷ்டோத்ரம்) செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ.1-50 க்கான டிக்கெட்டினை கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் 'பெயரும்' கோத்ரமும் வாசிக்கப்படும்)

* திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

ஆக, எம்பெருமானை தாயென்றே, தந்தையென்றே, நாயக, நாயகி யென்றே, நண்பனென்றே, எஜமான னென்றே, ஏதாவதொரு வகையில், அவனிடம், மனம், வாக்குக் காயம், மூன்றையும் ஈடுபடுத்தியிருப்பதே பக்தியாகும். இத்தகைய பக்த னுக்கு, ஈஸ்வரன் தன்னைக் கொஞ் சம் கொஞ்சமாகக் காட்டித் தரு வான். இந்நிலையையே, ஆழ்வார் கள் கண்டு, பலப்பல படியாகப் பாடியிருக்கிறார்கள். நம்மாழ்வார்

'' பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்
காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்—நீலாழிச்
சோதியாய்! ஆதியாய்! தொல்வினை யெம்பால் கடியும்
நீதியாய்! நிற்சார்ந்து நின்று ''

'' பெற்ற தாய் நீயே பிறப்பித்த தந்தை நீ
மற்றையாராவாரும் நீ பேசில்— எற்றேயோ
மாயமா மாயவளை மாய முலைவாய் வைத்த
நீயம்மா! காட்டும் நெறி ''

என்று பெரிய திருவந்தாதியில் பாடு கிறார்.

"மாதா: பிதா: ப்ராதா: நிவாஸ: சரணம்: ஸுஹ்ருத்: கதி: நாரா யண:"

தாய், தந்தை, சகோதரன், இருப் பிடம், ரக்ஷகன், நண்பன், அடைய வேண்டிய பேறு எல்லாம் நாரா யணனே என்கிறது உபநிஷத்.

'' த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ பந்து: ச ஸ்வம் த்வமேவ|
த்வமேவ வித்யா த்ரவிணம்த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தேவதேவ ''||

அன்னை நீ, அப்பன் நீ, உற்றார் நீ, உற்ற நண்பன் நீ, கல்வியும் நீ, செல் வமும் நீ, ஏ தேவ தேவனே! எனக்கு எல்லாமே நீயே என்பதாம். குலசேகர ஆழ்வார் தமது பெரு மாள் திருமொழியில்,

'' ஊனேறு செல்வத்து உடற் பிறவி யான் வேண்டேன்
ஆனேறேழ் வென்றானடிமைத் திறமல்லால்
கூனேறு சங்கமிடத்தான் தன் வேங்கடத்து
கோனேறி வாழும் குருகாய்ப் பிறப்பேனே ''

என்றும்,

ஆனாத செல்வத் தரம் பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்

என்றும்,

கம்ப மதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்

என்றும் பாடி திருவேங்கடத்தில் ஏதேனும் ஒன்றாகவாவது பிறந்து, அங்கிருக்கும் எம்பெருமானைச் சதா பார்த்து ஆநந்தித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று பாடுகின்றார். இவ் வாழ்வாரே தேவகியாக மாறி கண்ணன் சேஷ்டி தங்களைப் பாடுகிறார். நாம் படிக் கும்போது நம்மையும் அறியாமல் நமது கண்களில் கண்ணீர் வரும். அதே ஆழ்வார் தன்னை தசரதனாக எண்ணி, இராமனைப் பிரிந்து மனதை உருக்கும்படி புலம்புகிறார். இதே போல் எல்லா ஆழ்வார்களின், பரம னிடம் கொண்டிருந்த பக்தி நன்கு விளங்கும். பகவான் காட்சி அளிக் காதபோது, அவர்கள் படும் துயரம் சொல்லற்பாலது.

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம் பல ஆண்டுகளாக இருந்தாலும், அதைப் பிரகாசப்படுத்தியவர் ஆதி சேஷ அம்சராய் விளங்கிய ஸ்ரீமத் ராமாநுஜர். கி. பி. 1017-ல் தோன் றிய இவர் ஸ்ரீபெரும்பூதூரில் அவ தரித்தார். ஸ்ரீமஹாவிஷ்ணுவே ஸர்வேஸ்வரன். இவனே வேதங் களில் கூறப்படும் பரப்ரம்ஹம். கல் யாண குணங்கள் நிரம்பியவன். இவனே நியமித்த காரணமா யிருந்து, இப்பிரபஞ்சத்தை சிருஷ் டித்து, ரக்ஷித்து, ஸம்ஹரிக்கிறான். ஸர்வஸ்வதந்த்ரன். இவனுக்கு லக்ஷ்மி என்ற ஒரு பத்னியுண்டு. இவளும் பரமாத்மாவைப் போலவே எங்கும் வியாபித்திருக்கிறாள். பிரளய காலத்தில் லக்ஷ்மியும், மகாவிஷ்ணு வும்தான் அழியாமல் இருப்பார்கள். உலகத்திலுள்ள ஜீவர்களை ரக்ஷிப் பதற்காகவே ஈஸ்வரன் காருண்ய சௌலப்ய குணங்களுடன் விளங்கு கிறான். மகாலக்ஷ்மியும் சேதனர் களுக்காக, கருணையுடனேயிருந்து ரக்ஷித்து வருகிறாள். ஸ்ரீமந் நாரா யணனே பரப்ரம்ஹம் என்று உப நிஷதங்கள் கூறுகின்றன.

'' நாராயண: பரம்ப்ரம்ஹ
தத்வம் நாராயண: பர: |
நாராயண: பரோ ஜ்யோதிர்
ஆத்மா நாராயண: பர: || ''

என்கிறது தைத்ரீயம். அதாவது, நாராயணனே பரப்ரம்ஹம். அந் நாராயணனே பரதத்வம். நாரா யணனே பரஞ்ஜோதி. அந்நாரா யணனே பரமாத்மா. பரம் என் றால் மிகவும் உயர்ந்தது எனப் பொருள். நமது ஸித்தாந்தப்படி நாராயணன் என்பது பெரிய பிராட்டியோடு கூடிய நாராயணனே பரதத்வம். "அகல கில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா", என்கிறார் ஆழ் வார். "கடிமலராள் பிரியாத அத்திகிரி அருளாளன்" என்கிறார் ஸ்ரீ வேதாந்த தேசிகர். லக்ஷ்மியும், நாராயணனும் சேர்ந்த மிதுனமே நமக்குப் பரதத்வம். ஈஸ்வரனது அனுக்ரஹத்தால், சம்சார சுழலி லிருந்து விடுபட்டு, மோக்ஷத்தை யடைந்து, அவனுக்குக் கைங்கர்யம் செய்துகொண்டு போகங்களை அனு பவித்துக்கொண்டிருப்பதே புரு ஷார்த்தம். அவனை அடைய ப்ர பத்தியே அதாவது, "நான் அகிஞ்ச னன். உன்னை விட்டால் எனக்கு வேறு கதியில்லை. என்னை ரக்ஷித் தருள வேண்டும்' என அவன் திரு வடிகளில் சரணமடைவதே. இதுவே மிகவும் உயர்ந்ததாகும். இந்த ஜீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் முள்ள சம்பந்தம் அனாதியானது. எப்போதும் ஒருவரை விட்டு ஒரு வர் பிரிவதில்லை. ஈஸ்வரன் பர மாணுவாய் இந்த ஜீவனில் இருக்கி றான். பெரியாழ்வார், "அடியோ மோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு" என்கிறார். ஆண்டாள், "எற்றைக்கும் ஏறேழ் பிறவிக்கும் உந்தன்னோடு, உற் றோமேயாவோம், உனக்கே நாம் ஆட் செய்வோம்", என்று கூறிய தும் பரமாத்மா-ஜீவாத்மா தத் வத்தை நன்கு விளக்கும்.



சென்ற இதழ்த் தொடர்ச்சி....

# ★ வைணவம் ★

**அர்த்த பஞ்சகம்:**

சித்து, அசித்து, ஈசுவரன் என்ற இம்மூன்று உறுதிப் பொருள்களுடன், உபாயம் உபேயம் என்னும் வேறு இரு உறுதிப் பொருள்களையும் சேர்த்து ஐந்தாகக் கூறுதலும் உண்டு. இவை அர்த்த பஞ்சகம் எனப்படும். வைணவராகப் பிறந்தோர் இவ்வைந்து பொருள்களைப் பற்றியும் அறிந்திருக்க வேண்டும் என்றும் அப்போதே வீடுபேறு உறுதி என்றும் கூறுவர்.

'' மிக்க இறைநிலையும், மெய்யாம் உயிர் நிலையும்,
தக்க நெறியும், தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும், வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
யாழினிசை வேதத் தியல்''

என்ற பட்டர்பிரானின் திருவாய்மொழித் தனியன் இதனை உணர்த்துகின்றது. அடைய வேண்டிய பொருள், அடைகிறவன், அடைவதற்காகச் செய்ய வேண்டியவை, அடைவதில் காணப்படும் இடையூறுகள், அடைவதனால் ஏற்படும் பயன் என்ற ஐந்தும் இதில் குறிக்கப்படுகின்றன. இறையியல், உயிரியல், நெறியியல், தடையியல், பயனியல் என இவற்றைச் சுருங்கக் கூறலாம்.

இவற்றுள் நெறியியல் உபாயம் எனப்படும் உபாயம் என்பதற்குச் சாதனம் எனப் பொருள். இறைவனைப் பெறுவதற்குரிய சாதனங்களே இங்கு உபாயமாகக் குறிக்கப்படுகின்றன.

இறைவனை அடைதற்குரிய உபாயங்களாக வைணவம் ஐந்தினைக் கூறுகின்றது. கரும நெறி, ஞான நெறி, பக்தி நெறி, சரணாகதி நெறி, குருவருள் நெறி என்பவையே அவை.

நாம் செய்ய வேண்டிய கடமைகளை ஒழுக்கத்தோடும் தூய்மையோடும் செய்வதே கரும நெறி ஆகும். பயன் கருதிச் செய்கின்ற கருமம் காமிய கருமம் எனப்படும். இவ்வாறு பயன் ஒன்றும் கருதாமல் செய்யப்படும்போது அது நிற்காமிய காமமாகின்றது. இதுவே மிக உயர்ந்தது. ஒரு செயலைச் செய்யும் போது, 'என் செயலாவது யாதொன்றுமில்லை; எல்லாம் அவன் செயலே' எனச் செய்யும் போது அது வழிபாடாகி யோகமாகின்றது. 'சர்வம் கிருஷ்ணார்ப்பணம்' எனச் செயல் செய்வது உண்மையிலேயே மிகச் சிறந்த வழிபாட்டு நெறி. ஏனெனில் இங்கு 'யான்' என்னும் அகப்பற்றும், 'எனது' என்னும் புறப்பற்றும் சற்றும் இல்லை. எனவே இது கரும யோகமாகின்றது.

இதனையடுத்த ஞான நெறியைத் தத்துவ நெறி என்றே கூறலாம். ஆன்மாவையும் பிரம்மத்தையும் இணைக்கும் சாதனமாக ஞானமே அமைகின்றது. எனவே நெறிகளுள் சிறந்தது ஞான நெறியே என்பர். விவேகம், வைராக்கியம், பயிற்சி (அப்பியாசம்) ஆகிய மூன்றும் ஞான நெறிக்கு இன்றியமையாத அடிப்படைகள்.

இறைவன்மீது அன்பு கொண்டு, இடைவிடாமல் அவனை நினைத்து வழிபாடு செய்யும் நெறியே பக்தி நெறி. இறைவன் திருவுருவை நெஞ்சில் நினைத்தல், எப்போதும் அவன் நினைவாகவே இருத்தல், இறைவன் திருவடிகள் மட்டுமே சதம் என்று உணர்தல், உலக உறவுகளைப் பொய்யென்று உணர்தல், இறைவனோடு உறவு கொள்ளத் தொடங்குதல், தன் மனம் வாக்கு காயம் ஆகிய அனைத்தையும் அவனுக்கே உரிமையாக்கல், இறைவன் திருவருளைப் பெறக் காதலாகிக் கனிந்து அழுது நிற்றல், தன் நெஞ்சை இறைவன்பால் நிலை நிறுத்துதல், இறைவனுடைய திருவடி நிழலில் திளைத்தல், இதனின்றும் மாறாத உறுதி கொள்ளல் ஆகிய பத்தும் பக்தி நெறியின் பத்துப் படிகளாகக் கூறப்படுகின்றன. இப்படிகளில் ஒவ்வொன்றாக ஏறிப் பத்தாவது படியில் நிற்கும்போது பக்தி யோகமாகிறது.

டாக்டர். இரா. தண்டாயுதம்
மலேசியா

பக்தி முதிர்ந்த நிலையில் இறைவனுக்கும் பக்தனுக்கும் இடையில் பல்வேறு உறவு நிலைகள் ஏற்படுகின்றன. தாச பக்தி, தோழமை பக்தி, தாய்மைப் பக்தி, தந்தை பக்தி, நாயக பக்தி என ஐந்தாக வைணவம் இவ்வுறவு நிலைகளைக் காணும். இராமபிரானிடம் அனுமன் கொண்ட பக்தி தாச பக்தியினையும், கண்ணனைத் தோழனாகக் கருதி அர்ச்சுனன் செய்த பக்தி தோழமைப் பக்தியையும், கண்ணனின் தாயாக இருந்து யசோதை செய்த பக்தி தாய்மைப் பக்தியையும், கண்ணனுக்குத் தந்தையாகக் கருதிப் பெரியாழ்வார் செய்த பக்தி தந்தைப் பக்தியையும், திருமாலைத் தன் காதலனாக்கி ஆண்டாள் செய்த பக்தி நாயகி பக்தியையும் விளக்கும்.

பக்தி செய்வதற்குப் பக்தனுடைய மனம் பக்குவமாகிக் கனிந்து நிற்பதே முதன்மையானது. இவ்வாறு கனிந்து நிற்கப் பாகவதம் எட்டு வழிகளைக் காட்டுகிறது. தம்மைப் போன்ற பக்தர்களிடம் அன்பு செலுத்துதல் (மத்பக்த ஜன வாத்ஸல்யம்), பூசை முறைகளை ஏற்றுக் கொள்ளுதல் (பூஜாயாம்ச்சானு

மோதனம்), இறைவன் புகழ்பாடும் கதா காலட்சேபங்களைக் கேட்டல் (மத்கதா ஶ்ரவணே பக்தி), பக்தி பெருகப் பெருகக் குரல் தழு தழுத்தலும் கண்கள் நீர் பெருக்கலு மாகிய வெளிப்பாடுகள் (ஸ்வர நேத்ராங்க விக்ரியா), தானே முனைந்து பூசை செய்தல் (ஸ்வய மாராத நேயத் நஹ:), செருக்கும் ஆடம்பரமும் இல்லாமலிருத்தல் (மமார்த்தே டம்ப வர்ஜனம்), சதா இறைவனை நினைத்தல் (மமாநுஸ்மரணம் நித்யம்), பயன் கருதாத வழிபாடு (யச்சமாம் நோப ஜீவதி) என்பன அவ்வழிகள்.

இதனையடுத்த சரணாகதி நெறி வைணவ சமயத்தின் உயிர் நெறியாக விளங்குகின்றது எனலாம். மற்ற நெறிகளில் நான் என்னும் அகந்தைக்குச் சிறிதாவது இடமுண்டு. ஆனால் இந்நெறியில் அதற்குச் சற்றும் இடமில்லை. இந்நெறியைக் கைக் கொண்டு இறைவனிடம் அடைக்கலம் புகும் பக்தன், எல்லா உலகங்களுக்கும் அடைக்கலம் தரும் ஒருவனாகவே (சர்வ லோக சரண்யன்) இறைவனைப் பார்க்கிறான்.

வைணவத் தத்துவ அடிப்படையில் உலகம் திருமாலின் உடலாகவே கருதப்படுகின்றது: அவ்வாறிருக்கையில் உலகைக் காப்பது இயல்பாகவே அவன் கடமையாகின்றது. எனவே, தானும் அவனுடைய ஒருடல் என்றும் தன்னைக்காப்பது அவன் கடமை என்றும் உணர்ந்து, ஒருவன் தன்னை அப்படியே இறைவனிடம் ஒப்படைத்து விட வேண்டும். அவ்வாறன்றி என்னை நானே காத்துக் கொள்வேன் எனக் கருதுவது இறை நெறிக்கு முரணானது. இத்தகைய அகங்காரமும், அதனால் வரும் மமகாரமுமே இறைவன் நம்மைக் காப்பதற்குத் தடையாய் இருப்பன. இவற்றிலிருந்து விடுபட்டு, இறைவனிடம் தன்னை முழுக்க ஒப்படைத்தலைப் பரந்நியாஸம் என வைணவம் போற்றுகின்றது. ''நீர் நுமதென்றிவை வேர் முதல் மாய்த்து இறை சேர்மின்; உயிர்க்கு அதனேர் நிறையில்லை'' என நம்மாழ்வார் பாடுகிறார். சற்றும் தீமை கலவாத நன்னெறியாக வைணவர்கள் இதனைக் கருதுகின்றனர்.

ஐந்தாம் நெறியான குருவருள் நெறி, உரிய ஆசாரியன் மூலம் திருவருள் பெற வழிகாட்டுவதாகும்.

உலகில் உள்ள ஒரு பொருளின் இயல்பை உள்ளபடி அறிவதற்கு உதவும் சாதனத்தைப் பிரமாணம் என்பர். இது மூவகைப்படும். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பவற்றை அறிய உதவும் புறப்புலன்கள் ஐந்தும், நன்மை தீமை ஆகியவற்றின் விளைவான இன்ப துன்பங்களை நுகர்வதற்கு அமைந்த உள் இந்திரியமும் சேர்ந்து அனுபவத்தில் காண்பது கண்கூடு (பிரத்தியட்சம்). இவ்வாறல்லாமல் நெருப்பின் இருக்கையைப் புகையின் மூலமும், காற்றின் உண்மையைச் செடி கொடிகளின் மூலமும் அறிவது ஊகம் (அனுமானம்) ஆகும். இவ்விரண்டாலும் அறிய முடியாதவற்றை அறியத் துணை நிற்பன வேதச் சொற்களாகும்: இது 'சொல்வழி' (சப்தம்) எனப் போற்றப்படும். இறைவனை அறிவதற்கு முன்னிரண்டு வழிகளை விடவும் இறுதி வழியே மேலானது. ஆசாரியன் அருளால் அன்றி இவ்வழியில் அடியெடுத்து வைக்கவும் இயலாது. எனவே இறைவனின் அருள் பெற விரும்பும் பக்தன் ஒருவன் தகுந்த ஆசாரியனை அடைந்து, அவர் உபதேசங்களின் மூலம் இறையருள் பெற முயலும் நெறி குருவருள் நெறியாகிறது. வைணவர்களில் யாராவது ஒருவர் வைகுண்டப் பதவியடையும்போது, 'ஆசாரியன் திருவடியடைந்தான்' என்று குறிப்பிடும் வழக்கே இந்நெறியின் செம்மை யுணர்த்தும்.

இவ்வகை உபாயங்களை முறையாகப் பின்பற்றி அடையும் பயனே உபேயம் ஆகும். உபேயம என்பதற்குப் பயன் என்றே பொருள்.

உபேயமாகிய பயனை வைணவம் மூன்று வகையாகக் கூறுகின்றது. அவை செல்வப்பேறு, கைவல்யப்பேறு, வீடு பேறு (முத்தி) எனப்படும்.

முதலாவதாகிய செல்வப் பேறு உலகச் செல்வங்களைக் குறிக்கும். எனவே இது அசித்தைச் சேர்ந்தது. செல்வங்களால் பெறுவது துன்பமே ஆதலின் இப்பயன் சிறந்ததொரு பயனாகாது.

அடுத்ததாகிய கைவல்யம் என்பது, குற்றங்கள் நீங்கிய நிலையில், ஞானானந்தங்களை வடிவமாகக் கொண்ட ஜீவன் தன்னைத்தான் அனுபவித்து வாழ்வதாகும். இது ஆன்ம தத்துவத்தைச் சேர்ந்தது. எனவே நித்தியமல்லாதது. இக்காரணத்தால் இதுவும் சிறந்த பயனாகக் கருதப்படுவதில்லை.

இறுதியாக உள்ள வீடுபேறு எனும் முத்தியே வைணவக் கொள்கையின்படி மிகச் சிறந்த உபேயமாகும். ஆன்மா பரமபதத்தில் இறைவனை அடைந்து பேரின்பம் அடையும் பயன் இம்முத்தியிலேயே உள்ளது. அன்றியும் மீளாத அடிமை செய்து இறைவனை உகப்பிக்கவும் இந்நிலையிலேயே முடியும். இது நித்தியமானதுங் கூட. எனவே வீடு பேற்றையே வைணவம் மிகச் சிறந்த உபேயமாகப் போற்றுகின்றது.

**திருமாலின் ஐந்து நிலைகள்:**

எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் திருமாலாகிய பரம்பொருள் பக்தர்கள் தத்தம் நிலைக்கு ஏற்ப வழிபட்டு உய்வதற்காக ஐந்து நிலைகளில் நின்று தரிசனம் தருவதாக வைணவ ஆகமங்கள் கூறுகின்றன. அவை பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை எனப்படும். இவ்வைந்து நிலைகளிலும் நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் பரமாத்வாகிய அவன் அருள் பாலிக்கிறான்.

பரத்துவம் அல்லது பரசொரூபம் என்னும் மேலான வடிவம் வைகுண்டத்தில் இருக்கும் கோலம். திருமகள் (ஸ்ரீ), மண்மகள் (பூதேவி), ஆய்மகள் (நீளாதேவி) ஆகிய தேவியரோடு, தம்மை விட்டுப் பிரியாத அனந்தன், கருடன், நித்தியர், முக்தர் ஆகியோருக்குப் பரமபதத்தில் இன்முகம் காட்டிப் பேரருள் பொழியும் நிலையிலேயே இப்பரத்துவ நிலை உள்ளது.

வியூக சொரூபம் வெளிப்பட்ட வடிவத்தைக் குறிக்கும். உலகைப் படைக்க நான்முகனைப் படைத்த பரமன், தேவர்களின் குறை கேட்டு அவற்றைக் களைவதற்கும், உலகில் யோனிகள் தோறும் தன்னைத் தாழவிட்டுப் பிறப்பதற்கும் திருப்பாற்கடலில் பாம்பணைமீது பள்ளிகொண்டிருக்கும் திருக்கோலமே வியூக சொரூபம். இது நான்கு வகைகளில் உண்டாகிறது. பரவாசுதேவன் என்பது பரப்பிரம்ம சொரூபம். இதிலிருந்து சங்கருடணன் என்ற மனம் உண்டாகிறது. அதிலிருந்து அநிருத்தன் என்ற அகங்காரம் உற்பத்தியாகிறது. வாசுதேவன், சங்கருடணன், பிரத்யும்நன், அநிருத்தன் என்ற இந்நான்கும் வியூக நிலைகள்.

விபவ சொரூபம், தோன்றி வந்த வடிவம். தீயோரை அழித்து, நல்லவர்களைப் பேணி, உலகில் அறத்தை நிலைநிறுத்தத் திருமால் மண்ணுலகில் இராமன், கண்ணன் முதலிய அவதாரங்களாக வருவது விபவமாகும். நினைத்தபோது, நினைத்த இடத்தில், நினைத்த வண்ணம் அவதரிக்க வல்ல வல்லமை அவன் ஒருவனுக்கே உண்டு; அவனே சர்வ சுதந்திரன். அவதார கோலங்களில் இவ்வுண்மைகளைக் காணலாம். பரம்பொருளாகிய அவனது மேன்மைக் குணங்கள் எல்லாம் ஒளிவிட்டு ஒளிர்வது இவ்வவதார காலங்களில்தாம்.

அந்தர்யாமி சொரூபம் என்பது, இயங்குதிணை, நிலைத்திணைப் பொருள்களில் கரந்துறையும் உள்ளுறை வடிவத்தைக் குறிப்பிடும். உயிர்களின் உளதாதல் (ஸத்தை) நிலைத்தல் (ஸ்திதி), ஒரு செயலில் மூளுதல் (பிரவிருத்தி), ஒன்றிலிருந்து விடுபடல் (நிவிருத்தி) ஆகியவற்றில் தான்இட்ட வழக்காய் விளங்கும் பரமன், பாலுக்குள் நெய் போலும், எள்ளுக்குள் எண்ணெய் போலும் இவ்வுலகெங்கும் நிறைந்து நிற்றலை இச்சொரூப நிலை விளக்குகின்றது.

திருக்கோவில்களிலும் வீடுகளிலும் பிரதிக்கப்பட்ட வழிபடுவதற்குரிய வடிவம் அர்ச்சாவதாரம் ஆகும். தானிட்ட வழக்காய் உயிர்களை ஆளும் பரமன் இவ்வடிவத்தில் அடியவர்கள் இட்ட வழக்காய் அவர்கள் கண்களுக்குப் புலனாகி, பொன் வெள்ளி முதலிய உலோகங்களிலும், மரம் மண் கல் முதலிய அனைத்திலும் எழுந்தருளி அருள் பாலிக்கிறான்.

இவ்வைந்து நிலைகளில் வழிபாட்டுக்குரிய உருவநிலையான அர்ச்சாவதாரத்தையே ஏற்றம் அதிகம் கொண்ட நிலையென வைணவ உலகம் ஏற்றிப் போற்றிக் கொண்டாடுகிறது. ஏனெனில் மற்ற சொரூபங்களில் விளங்கும் இறைவனை எல்லோரும் தரிசித்து வழிபட்டுவிட இயலாது. பரமபதத்தில் பர சொரூபமாக இருக்கும் இறைவனை தேவர்களும் முனிவர்களுமே வழிபட இயலும். வியூக நிலையில் எழுந்தருளி இருக்கும் இறைவனைச் சிவன் முக்தர்கள் போன்றோரே வழிபட இயலும். விபவ நிலையில் இறைவன் திருக்கோலங்களை அவ்வவதார காலங்களில் வாழ்ந்தவர்கள் மட்டுமே அனுபவிக்க முடியும். அந்தர்யாமி சொரூபத்தில் இறைவனை வணங்கவோ அளவற்ற மனப்பக்குவம் வேண்டும். ஆனால் அர்ச்சா ரூபத்தில் இருக்கும் இறைவனை யாரும் எக்காலத்திலும் தரிசித்து வழிபட முடியும். எனவே இவ்வர்ச்சா ரூப நிலையே மனிதர் வழிபட்டு உய்வதற்குச் சிறந்தது என வைணவம் கூறுகின்றது. 'மனித சென்மத்தில் பகவானை அனுபவிக்கும் முறை, அர்ச்சாவதார சொரூபத்தில் நிற்கும் பரமனுக்குக் கைங்கரியங்களையெல்லாம் குறைவறச் செய்வதேயாகும்' என்பது வைணவ சமய ஆன்றோர் வாக்கு.

இதனை மேலும் விளக்குகையில், "ஸ்ரீமந் நாராயணனுடைய பர,

---

## "மார்கழி பீடை மாதமா...?"

"மார்கழி மாதத்தை 'பீடை மாதம்' என்றும், அம்மாதத்தில் எந்த சுபகாரியங்களும் செய்யக் கூடாது என்றும் சொல்கிறார்கள். உண்மையில் இது பீடை மாதம் அல்ல. இது 'பீடு + ஐ' = பீடை உடைய, அதாவது பெருமையுடைய சிறந்த மாதம் என்பதாகும். அதனாலேயே கீதாசார்யனும்,

"மாஸானாம் மார்க சீர்ஷோஸ்மி..." என்று

மாதங்களில் நான் மார்கழி என்கிறார்.

இம்மாதத்தை பகவத் தியானத்தில் மட்டுமே செலவழிக்க வேண்டும். கோவிந்தனை பூஜிப்பதற்கும், புண்ணியம் தேடுதற்கும் உகந்தது மார்கழியே. இக்காலத்தில் வேறு விழாக்களிலும், கேளிக்கைகளிலும் ஈடுபடக் கூடாது என்பதற்காகவே ஒதுக்கியுள்ளார்கள். புனிதமான இம்மாதத்தைப் பற்றி நாம்தான் தவறாகச் சொல்லிக் கொண்டு திரிகிறோம்."

நடாதூர் வி. திருமகள்—பாண்டிச்சேரி-3.

வியூக, விபவ, அந்தர்யாமி நிலைகளை விட, அர்ச்சை நிலையே மிகச் சிறந்த தாகும்: பரநிலையாகிய பரமபதத்தில் இறைவனுடைய கல்யாண குணங்களுக்குப் பகல் விளக்குப் போலப் பொலிவு இல்லை. இது மேக மண்டலத்திற்கும் அப்பாற்பட்ட கைக்கு எட்டாத நீர் போன்றது. அடுத்த திருப்பாற்கடலில் சயனமாகிற வியூக நிலை தேவர்கட்கும் முனிவர்கட்குமே அடையஎளிது. மானிட சென்மம் படைத்த பக்தர்கட்குக் கடல் நீரைப் போன்று உதவாதது. அவதாரங்களாகிய விபவ நிலையை அனுபவிக்க அன்று நாம் பிறந்திலோம்! அதனால் விபவங்கள் சில காலங்களில் பெருக்கெடுத்து ஓடி அற்றுவிட்ட ஆறுகள் போன்று தற்போது அரிதானவை. அந்தர்யாமித்வ நிலை, நம் புலன்களுக்கு எட்டாதது: பூமிக்கடியில் தங்கி நம் கண்ணுக்கு எட்டாமல் உள்ள நீர் போன்று எளிதில் பிரயோசனப்படாதது. திவ்விய தேசங்களில் எம்பெருமான் சேவை சாதிக்கும் அர்ச்சை நிலையே எக்காலத்தும் உதவும் ஏரி, குளம் முதலிய நீர்த் தேக்கங்கள் (தேங்கின மடுக்கள்) போன்று உதவுபவை'' என மிக அழகாகக் கொங்க லேட்டி ஏ. வி. கன்னைய நாயுடு விளக்குகிறார். இக்காரணத்தினாலேயே இறைவன் விரும்பி உறையும் தலங்களையெல்லாம் தரிசித்து ஆழ்வார்கள் அருட்பாடல்கள் பொழிந்தனர். திருமால் அர்ச்சாவதாரமாய் நின்று அருள் பாலிக்கும் திருவேங்கடமலை ஒன்றை வணங்கினாலே வினைகள் எல்லாம் ஒய்ந்துவிடும் என்கிறார் நம்மாழ்வார்.

'' குன்றம் ஏந்திக் குளிர்மழை
காத்தவன்!
அன்று ஞாலம் அளந்த பிரான்! பரன்
சென்றுசேர் திருவேங்கட மாமலை
ஒன்றுமே தொழ, நம்வினை ஓயுமே''

என்பது அவர் திருப்பாடல். இந்த அளவிற்கு அர்ச்சாவதார மகிமை வைணவத்தில் பேசப்படுகிறது. பக்தர்களுக்காக இரங்கி அருள் புரியவே இறைவன் இக்கோலம் கொள்ளுகிறான்.

இவ்வைந்து நிலைகளிலும், நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தான் எனும் நான்கு கோலங்களிலும் எழுந்தருளியிருக்கும் இறைவன் அனந்த கோடி கல்யாண குணங்களை உடையவன். அவற்றுள் அறிவு (ஞானம்), ஆற்றல் (சக்தி), வலிமை (பலம்), செல்வம் (ஐஸ்வர்யம்), ஆண்மை (வீரியம்) ஒளி (தேஜஸ்) ஆகிய ஆறும் மிக மேம்பட்ட குணங்களாகப் போற்றிக் கொண்டாடப்படுகின்றன. இவ்வாறு குணங்களையும் உடையதாலேயே இறைவன் பகவான் என்று அழைக்கப்படுகிறான். தன்னளவிலே இத்தகைய அளப்பற்ற குணங்களுக்கு இடமான இறைவன் உயிர்களுக்காகவே உடையவன் என்ற உறவுக் குணம் (ஸ்வாமித்வம்), அன்பு (வாத்ஸல்யம்), தோழமை (ஸௌசீல்யம்), எளிமை (ஸௌலப்யம்), கருணை (கிருபை), பொறுமை (க்ஷமை)' அழகு, இளமை ஆகிய குணங்களையும் கொண்டிருக்கிறான். இவ்வாறமைந்த பல்வேறு குணங்களே உயிர்களுக்குப் பிறவிக் கடலிலிருந்து விடுதலை வாங்கித் தருகின்றன.

பரம்பொருளின் ஐந்து சொரூப நிலைகளையும் வழிபடுவதற்கு ஏற்ற ஐந்து வழிகளையும் வைணவம் காட்டியுள்ளது. காலையில் எழுந்தவுடன் இறைவன் நாமத்தைச் சொல்வது (அபிகமனம்), பூசைக்குரிய நீர் மலர் ஆகியவற்றைக் கொண்டு வருதல் (உபாதானம்), பூசை செய்தல் (இஜ்யா), பாராயணம் செய்தல் (ஸ்வாத்யாயம்), நித்திய கருமங்களைச் செய்தல் (யோகம்) என்பவை அவை. இம்முறையில் இடைவிடாது வழிபட்டால் அவனுடைய அருள் கிட்டும் என்பது வைணவம் கண்ட உண்மை.

(தொடரும்)

---

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

டன் அதிகார நந்தியும் காணப்படுகின்றனர். முன்னே அரியணையில் உத்ஸவமூர்த்தி பொன்னூர் மேனியனும், ஆஸன பத்மத்திலே அழுத்திய திருவடியும், அரையில் சுற்றிய பீதக வாடையும், சங்கேந்து இடக்கரமும், ஆழிதாங்கு வலக்கரமும், அடியாரது அல்லல் தீர்க்க அஞ்சலென்றெடுத்த அயல்கரத்துடன் ஸேவை சாதிக்கிறார். இருமருங்கிலும் திருமகளும் மண்மகளும் வேயர்குல விளக்கும் காட்சிதருகின்றனர். கற்பூர ஆரத்தி கண்டு, துளஸீ பிரசாதங்களைப் பெற்றுக் கொண்டு வெளியே வருகிறோம்.

இக்கோயில் ஐந்து விண்ணகரங்களில் ஒன்று. இதனை இரண்டாம் நந்திவர்மன் கட்டியதென்பர் சரித்திர ஆராய்ச்சியாளர். விஜயநகர அரசர்களும், அவர்களுக்குப் பின் வந்த நாயக்கமன்னர்களும் இத்தலத் திருமாலிடம் பக்தி பூண்டொழுகினர். கோயிலின் மஹா மண்டபத்தில் விஜயரங்க சொக்கநாதர் குடும்பத்துடன் வழிபாடு செய்கின்றனர். இச்சிலைகள் நேர்த்தியானவை. நின்ற நிலையில் சிலைகள் உள.

இக்கோயில் வானமாமலைமடத்து ஆதீனத்திற்குரியது. அவர்கள் இக்கோயிலைச்சிறப்பாக நிர்வகித்து வருகின்றனர். ''நாதன் பெருமாளை ஸேவியாதவர் நாயாய் பிறப்பர்'' என இப்பெருமாளை ஸேவிப்பதின் அவசியத்தைப் பற்றி எழுந்த பழமொழி ஒன்று உண்டு.

இத்தலத்திற்கு அண்மையில் கிழக்கே இருப்பது நந்திவனம். அங்கு நந்திவனநாயகி என்ற திருப்பெயருடன் இப்பெருமானின் நாச்சியார் எழுந்தருளியிருக்கிறாள். கவி காளமேகம் பிறந்ததும், வளர்ந்ததும் இவ்வூரில்தான். இது போன்ற பல செய்திகளை அர்ச்சகர் எடுத்துரைக்கிறார். கோயில் அலுவலகத்தினர் எல்லோரிடமும் விடை பெற்றுக்கொண்டு தென்னூர் வந்து பஸ் ஏறி குடந்தை மீள்கிறோம். காதிலே அருச்சனை ஒலிக்கின்றது. நாதன் திருவுருவம் கண்முன்னே நிற்கிறது.

'' நாதனுறை கின்றநகர் நந்திபுர
விண்ணகரம் நண்ணு மனமே!''



# பாவையும் காமவேள் விரதமும்

ஒரு செயலைச் செய்து முடிப்பதற்கு முயற்சியே அடிப்படை; சில செயல்கள் ஒரு தடவை செய்யும் முயற்சியாலேயே வெற்றி பெற்று விடுகின்றன. சில செயல்கள், பல தடவை முயன்றால்தான் நிறைவேறுகின்றன. எனவே எந்தச் செயலும் ஒரு தடவை செய்யும் முயற்சியிலேயே முடிந்துவிடும் என்று நினைத்து விடக் கூடாது. மேற்கொள்ளும் செயலின் அருமையும், அதைச் செய்பவரின் மனவுறுதியின்மையும் காரணமாகச் சில செயல்கள் முடிவு பெறாமல் நின்றுவிடுதலும் உண்டு.

மனத்தில் எழும் ஆசை காரணமாகச் செயல்களைத் தொடங்குவோர் சிலர்; செயலைச் செய்து கொண்டிருக்கும் போது தடைகள் வருமானால், அவர்கள் தம் முயற்சியைக் கைவிட்டு விடுவார்கள். அல்லது மேற்கொண்ட செயல் நிறைவேறுவதில் காலதாமதம் ஏற்பட்டாலும் அவர்கள் தம் முயற்சியில் குன்றிவிடுவார்கள். அவர்கள் மனவுறுதி இல்லாதவர்கள். அவர்களால் எதையும் சாதிக்க முடியாது. 'தமது மனவலிமையை அறியாமல், வெறும் ஆசை காரணமாகச் செயலைத் தொடங்கியவர்கள் அதனை முடிக்கமாட்டார்கள்; இடையிலேயே நின்று விடுவார்கள்' என்கிறார் வள்ளுவப் பெருந்தகை.

உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முறிந்தார் பலர்

என்பது தமிழ்மறை.

எவ்வளவு கடினமான செயலாக இருந்தாலும் — இடையிடையே சோதனைகள் வந்தாலும் — செயல் நிறைவேறுவதில் தாமதம் ஏற்பட்டாலும், அச்செயலைச் செய்பவர் மனம் தளராமல் தொடர்ந்து முயற்சி செய்தால் வெற்றி பெறுவது உறுதி. 'முயன்றால் முடியாதது இல்லை' என்பது தொன்று தொட்டு வரும் அனுபவ மொழி அல்லவா?

இந்த அனுபவத்தை நமக்கு நன்கு உணர்த்துகிறார் ஆண்டாள் நாச்சியார். திருவில்லிபுத்தூர் வடபெருங் கோயில் பெருமாளுக்கு அணிவிக்கும் மலர் மாலையைத் தான் சூடி அழகு பார்த்து அனுப்பிய போதே 'அரியைத் தவிர வேறு யார்க்கும் நான் உரியவள் அல்லள்' என்னும் உறுதியை எடுத்துக் கொண்டு விட்டாள் அவள்.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடிக்கு, ஆயர்பாடிக் கண்ணன்மீது ஆவல் அதிகரிக்கிறது. திடீரென்று திருவில்லிபுத்தூர் மறைந்துபோய் விட்டது. அது இப்போது ஆயர்பாடியாக ஆகிவிட்டது! மாட மாளிகைகள் மறைந்து இடையர்களின் குடிசை வீடுகள் தென்படுகின்றன! வடபெருங்கோயில், நந்தகோபனின் அரண்மனையாகக் காட்சியளிக்கிறது! தோழிமார் எல்லாரும் ஆய்ச்சியராகி விட்டார்கள்! ஆண்டாளும் ஓர் ஆய்ச்சியாக — கோபிகையாக ஆகிவிட்டாள். இப்படி ஆண்டாளின் உள்ளத்தில் பாவனை நிகழ்கிறது. எதற்காக? கண்ணனையே கணவனாக அடைவதற்காக!

நல்ல கணவனைப் பெறுவது என்பது நினைத்த மாத்திரத்தில் கைகூடிவிடும் காரியமா? அதற்குக் கடவுளின் அருள் வேண்டாமா? இறைவனின் அருளைப்பெற நோன்பு



புலவர். பெ. கிருஷ்ணராஜன், எம்.ஏ.
சேலம்.

இருக்க வேண்டும் அல்லவா? இவை யெல்லாம் ஆண்டாளுக்குத் தெரியும். அதனால்தான் அவள் 'பாவை நோன்பு' நோற்கின்றாள்; பாவை நோன்பு இருப்பவர் நல்ல கணவனைப் பெறுவர் என்பது தொன்றுதொட்டு வரும் நம்பிக்கை.

'மாதங்களில் நான் மார்கழி' என்று பகவத் கீதையில் கண்ணன் கூறியிருக்கிறான். கண்ணனை அடைவது தானே ஆண்டாளின் கருத்து. எனவே கண்ணனுக்கு உகந்த மார்கழி மாதத்தையே தனது நோன்புக்கு ஏற்ற காலமாகக் கொள்ளுகிறாள். மார்கழி மாதத்தில் 'தண் புலர் விடியல்' நேரத்தைப் பிரம்ம முகூர்த்தம் என்று சொல்லுவார்கள். குளிர்ச்சியும் அமைதியும் மிகுந்த இந்த அதிகாலைப் பொழுதிலேயே நோன்பு ஆரம்பமாகி விடுகிறது. ஒவ்வொரு நாளும் நோன்பு நடக்கிறது.

'ஆயர்பாடிச் சிறுமிகள் அனைவரும் சிற்றஞ்சிறு காலையிலே நீராடி நோன்பைத் தொடங்குகிறார்கள். மார்கழி மாதம் முழுவதும் கண்ணுக்கு மை தீட்டிக் கொள்ளவில்லை; மலர் வைத்துக் கூந்தலை முடிக்கவில்லை; நெய்யும் பாலும் உண்ணவில்லை; இன்னாத செயல்களைச் செய்யவில்லை; யாரைப் பற்றியும் புறங்கூறவும் இல்லை. இவ்வாறு நோன்பு இருந்து கண்ணனைக் காணுகிறார்கள். கண்ணன் அவர்களுக்கு அருள் செய்கின்றான்.'

மார்கழி மாதம் முப்பது நாளும் நோன்பு இருந்து ஆண்டாள் பாடிய இப்பாடல்கள் 'திருப்பாவை' எனப் படும். பக்திச் சுவை சொட்டும் பாவைப் பாடல்களைத் தந்த ஆண்டாளை,'பாவை பாடிய பாவை' என்று தமிழுலகம் பாராட்டும்.

'வங்கக் கடல் கடைந்த மாதவனை...' என்று தொடங்கும் திருப்பாவை 30 ஆம் பாடலில், கண்ணன் பறை தந்து அருள் புரிந்ததாக ஆண்டாள் பாடுகிறாள். ஆனால் கண்ணனைக் கணவனாகப் பெறுவதுதான்

ஆண்டாளின் கருத்து. மார்கழி மாதம் முழுவதும் விரதம் இருந்தும் அந்த ஆசை நிறைவேறவில்லை. எனினும், எடுத்துக் கொண்ட முயற்சியைக் கைவிடும் எண்ணம் ஆண்டாளுக்கு இல்லை.

நம்மால் முடியும் என்று ஒரு காரியத்தைத் தொடங்குகிறோம்; ஆனால் முடியவில்லை. அப்போது வேறு ஒருவரின் உதவியை நாடியாவது அந்தக் காரியத்தை முடிப்பதற்கு முயற்சி செய்கிறோம். இதுதான் அறிவுடைமை. ஆண்டாளும் இப்படித்தான். பாவை நோன்பு, பார்த்த சாரதியைக் கூட்டி வைக்கவில்லையே என்று அவள் கவலைப்படவில்லை. யாரைக் கொண்டாவது கண்ணனை அடைவது என்று உறுதியாக இருக்கிறாள். மன்மதனை அவள் நினைத்துப் பார்க்கிறாள். காதலர்களை ஒன்று சேர்க்கும் மாயவித்தை அவனுக்கல்லவா தெரியும்! மேலும் அவன் விஷ்ணுமூர்த்தியின் மானசீகப் புதல்வன் ஆயிற்றே! அவனால் முடியும் என்று நம்புகிறாள்; அவனுடைய உதவியை வேண்டுகிறாள்.

மன்மதன், உயிரினங்களின் உள்ளங்களில் ஆண்டு முழுவதும் ஆசைக் கிளர்ச்சியை உண்டு பண்ணினாலும், அவனுக்குரிய சிறப்பான காலம் இளவேனில் பருவமாகும். சித்திரை, வைகாசி ஆகிய இரண்டு மாதங்களும் இளவேனில் பருவத்திற்கு உரியவை. இளவேனிற் காலம் வரும்வரையிலும் கூட ஆண்டாளால் பொறுத்திருக்க முடியவில்லை. முதுமை வருவதற்கு முன்பே அறம் செய்து புண்ணியத்தை அடைய வேண்டும் என்பது போல், மன்மதன் இளவேனிற் பருவத்தில் கொலு வீற்றிருக்க வருவதற்கு முன்பே அவனை வழியில் மடக்கிப் பிடித்து அவனுதவியால் கண்ணனை அடைந்துவிட வேண்டும் என்று நினைக்கிறது, ஆண்டாள் நாச்சியாரின் திருவுள்ளம்.

எனவே, தை மாதத்திலும் விரதம் தொடர்கிறது. 'தை பிறந்துவிட்டது; இனியாவது வழி பிறக்கும்' என்று அந்தப் பெண்ணுள்ளம் நினைக்கிறது. மாாகழியில் நீராடுவதற்குச் சென்றது போல, இப்போதும் பொழுது விடிவதற்கு முன்னரே குளிர் பொய்கை சென்று நீராடி வருகிறாள்; நோன்பு நோற்கிறாள். ஆனால் ஒரு வித்தியாசம்! முன்பு தோழிமாருடன் கூட்டமாகச் சென்று துறை படிந்து வணங்கினாள். இப்போது, தான் ஒருத்தியாகவே நோன்பு இருக்கிறாள். முன்பு தோழிமார் செய்த ஆரவாரத்தில் தனது வேண்டுதல் எம்பெருமானுடைய திருச்செவிகளுக்கு எட்டாமல் போயிருக்கலாம் என்று நினைத்து அந்தப் பேதை உள்ளம் இப்போது தனி நோன்பு மேற்கொண்டதோ?

மார்கழி நோன்பு, கண்ணனை அடைவதற்காகக் கண்ணனையே நோக்கிச் செய்த நோன்பு. இப்போது மேற்கொண்டிருக்கும் நோன்போ, கண்ணனை அடைவதற்காக மன்மதனை நோக்கிச் செய்யும் நோன்பு. குறிக்கோள் ஒன்று தான்; வழிமுறை தாம் வேறுபட்டிருக்கின்றன.

'நாச்சியார் திருமொழி' முதலிரண்டு திருப்பதிகங்களில் மன்மத விரதம் அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. நாள்தோறும் தண்புனலாடிய பின், வீட்டைப் பசுஞ்சாணத்தால் மெழுகுகிறாள்; வீட்டின் வாயிலை, வெள்ளை நுண்மணற் கொண்டு கோலமிட்டு அலங்கரிக்கின்றாள். வீட்டுச் சுவரில் மன்மதனுடைய பெயர், கொடி, குதிரை, கரும்புவில் ஆகியவற்றை எழுதுகிறாள்; வீட்டின் நடுவில் சக்கரம் அமைக்கிறாள். சக்கரத்தின் இரு பக்கங்களிலும் நெற்கதிர், கரும்பு, அரிசி அவல் ஆகியவற்றை வைக்கிறாள். முள்ளில்லாத சுள்ளிகளைப் பொறுக்கி வந்து சக்கரத்தின் நடுவில் அடுக்குகிறாள். நாவலிமை சான்ற மறையவர்களை அழைத்து வந்து எரி வளர்த்து மந்திரம் ஓதுவித்து மன்மதனை வணங்குகிறாள்.

முள்ளுமில் லாச்சுள்ளி எரிமடுத்து
முயன்றுன்னை நோற்கின்றேன்
காமதேவா!
வாயுடை மறையவர் மந்திரத்தால்
மன்மதனே! உன்னை வணங்கு
கின்றேன்!

என ஆண்டாள் நாச்சியார் தாம் செய்துவரும் தைமாத நோன்பினை எடுத்துரைக்கின்றார்.

மன்மதன் மனம் இளகவில்லை; கண்ணனைக் கொண்டு வந்து ஆண்டாளோடு சேர்க்கவில்லை அவன். மூன்று நேரமும் மன்மதனுக்கு விருப்பமான மலர்களைக் கொண்டு வந்து அவனை அர்ச்சித்து வணங்குவதில் ஆண்டாள் சளைக்கவில்லை. அவள் தன் நோன்பில் இன்னும் உறுதி கொள்கிறாள். ஒரு நாளைக்கு ஒரு வேளை மட்டுமே உணவு உண்டு விரதம் இருக்கிறாள். இதனால் அவளுடைய உடலும் தலையும் சிறுத்துவிடுகின்றன: வாய்ப்பகுதி வெளுத்துப் போய் விடுகிறது. இப்படியெல்லாம் விரதம் இருந்தும் மன்மதனுக்கு இரக்கம் வரவில்லையே!

தைமாதம் போய்விட்டது. மாசி மாதமும் வந்துவிட்டது. 'வேங்கடவற்கு என்னை விதி' என்று புலம்பும் ஆண்டாளின் அவலக்குரலை அரங்கன் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. ஆனால் மனம் தளரும் மானிடப் பிறவியா ஆண்டாள்? இல்லையே! அதனால் அவளது விரதம் மாசி மாதத்திலும் நீள்கிறது. பலன்... எதுவுமில்லை. பங்குனி மாதத்திலும் விரதத்தில் உறுதியாக இருக்கிறாள்.

பங்குனிநாள் திருந்தவே
நோற்கின்றேன் காமதேவா!

என்று குரலெழுப்பிக் கூப்பிட்டு உதவி வேண்டுகிறாள்.

இளையோரையும் வளையோரையும் சேர்த்து மகிழவைப்பவன் மன்மதன். அதற்குரிய காலம் இளவேனில். அந்த இளவேனிலை அடைய, மன்மதன் வரும் காலம் பங்குனி மாதம் என்று யாரோ ஆண்டாளிடம் சொல்லிவிட்டார்கள் போலிருக்

கிறது! மன்மதன் வருவான், வருவான் என்று பங்குனி மாதத்தில் ஒவ்வொரு நாளும் அவனை எதிர் பார்த்திருக்கிறாள். அவன் வரவில்லை. இன்றோடு பங்குனி மாதமும் முடியப் போகிறது. அவன் இன்னும் வரவில்லை.

காமன் போதரு காலமென்று
பங்குனி நாள் கடைபாரித்தோம்

என்று, மன்மதனிடத்தில் தான் ஏமாந்து போனதை ஆண்டாள் குறிப்பிடுகின்றாள். 'மன்மதனே! நீ வரும் காலம் இதுதான் என்று பங்குனியில் கடைசி நாள் வரையிலும் விரதம் இருந்து உன்னை எதிர்பார்த்தேன்' எனக் கூறுகின்றாள்.

தனக்கு அருள் செய்யாதது மன்மதனுக்கு ஒரு குற்றமாக முடியும் என்று ஆண்டாள் எண்ணுகிறாள். 'பார்க்கடல் வண்ணனுக்கே பணி செய்து வாழ வேண்டும்' என்று முப்போதும் உன்னடி வணங்கி அழுது புலம்புகிற என்னை நீ அலட்சியப் படுத்துவது, உழுகின்ற மாட்டுக்கு உணவு கொடாமல் நுகத்தடி கொண்டு அடித்து விரட்டுவது போல ஆகும்–என்று மன்மதன் மீது குற்றம் சுமத்துகிறாள்.

அதுமட்டுமா? மன்மதனைப் பார்த்துக் கடைசியாகச் சூளுரைக்கின்றாள் ஆண்டாள். 'இதோ பார், மன்மதனே! கண்ணனோடு நீ என்னைச் சேர்த்து வைக்கவில்லை என்பதற்காக நான் சாதாரண மானிடனுக்கு உரிமையாகிவிட மாட்டேன். வேள்வியில் வைத்த அவி உணவு தேவர்களுக்கு உரிமையாகுமே தவிர, காட்டு நரி மோப்பம் பிடிக்குமாறு யாரும் விட்டுவிட மாட்டார்கள். அது போன்றதே என் உடலும். சங்கு சக்கரமுடைய உத்தமர்க்கென்றே வளர்ந்த இவ்வுடம்பை மானிடவர்க்கு உரிமையாக்குவது என்னும் பேச்சு எழுமாகில் நான் உயிர் வாழ மாட்டேன். இதனை நீ தெரிந்து கொள்.'

வானிடை வாழுமவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்த அவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வ தொப்ப
ஊனிடை ஆழிசங்கு உத்தமர்க்கென்று
உன்னித் தெழுந்த என்தடமுலைகள்
மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில் லேன்கண்டாய் மன்மதனே!

என்று மன்மதனிடம் சபதமிட்டுப் பேசுகிறாள் ஆண்டாள்.

பாவை பாடிய பாவை, பங்குனித் திங்கள் முடிய விரதவிருந்து சூளுரைத்த உறுதி கண்டு மன்மதன் மனமிரங்கி அவளைக் கண்ணனோடு சேர்த்தானோ? கண்ணன் தான் மனம் கசிந்து அவளை மனைவியாக ஏற்றானோ? நமக்குத் தெரியாது. ஆனால்,

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாம நிரைதாழ்ந்த
பந்தரின்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்து
கைத்தலம்பற்றி ஆண்டாளை மணந்தான்

என்பது உண்மை. இதை வரலாறு உணர்த்துகிறது. ★



திருச்செந்தூர் முருகன் கோயில்—திரு. வி. முத்துராமன்—கோவை.




திரு. பி. சுந்தரராமன், M.A., BEd..
பழமார்னேரி.

வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் திருஅருட்பாவில்,

"...............................
முன்னாள் மிகத்தேடிமனத்
தருமாலுழக்க அனலுருவாகி
அமர்ந்தருளும் பெருமான்"

என்று கூறுவார். இந்தப்புனிதக் கார்த்திகைப் பெருநாளைத்தமிழ்நாட்டிலுள்ள எல்லாக் கோயில்களிலும் சிறப்பாகக் கொண்டாடுகிறோம். இந்தக் கார்த்திகைவிழா யான் எனது என்னும் செருக்கை நீக்கி நல்வாழ்வு அளிப்பதாகும். அடிமுடி தெரியாத ஜோதி வடிவான இறைவனைக் குறிக்கும் வகையில், கோயில்களில் ஒரு பனைமரம் உயரத்திற்கு ஓலைகள் மற்றும் மட்டைகளை அமைத்து அதைக் கொளுத்தித் தீப்பிழம்பான அச்சோதியை சிவபெருமானாகவே எண்ணி வணங்குகிறோம். சொக்கனை அதாவது சிவபெருமானை சோதியாக வழிபடுவதால் "சொக்கப்பானை" என்று அழைக்கிறோம்.

மயிலை கபாலீச்வரர் கோவிலில் நடக்கும் தீப விழாவைப்பற்றி,

"துளக்கில் கபாலீச்சுரத்தான்
தொல் கார்த்திகை நாள்
தையலார் கொண்டாடும்
விளக்கிடு காணாதே
போதியோ பூம்பூவாய்"

என்று சம்பந்தர் பெருமான் பாடுவார். 'தொல் கார்த்திகைத்திருநாள்' என்பதால் இவ்விழாவின் தொன்மையும் சிறப்பும் நன்கு விளங்கும். இறைவன் அருவமாய் இருப்பவன். இயல்பாகவே குறியும் குணமும் இல்லாது மனம் வாக்கு பொறிகட்கு எட்டாமல் அமைபவன். ஜோதியாய் நின்று ஈசன் லிங்கோத்பவ மூர்த்தியாக காட்சி தந்த இடமே திருவண்ணாமலை. அருணாசலம், சோணகிரி என்றழைக்கப்படும் இத்தலம் பஞ்சபூதத்தலங்களுள் அக்னிக்குரிய தலமாக விளங்குகிறது.

"எதிராய செக்கரினும் இக்கோலம் செய்தான்
முதிரா மதியான் மடி"
(அதி. அந்தாதி-80)

என்றவாறு காரைக்கால் அம்மையார் அவரது தோற்றத்தை செக்கரை விடப் பிரகாசமாய் இருப்பதாகக் கூறுகிறார். ஜோதி வடிவமாய் அருணாசலத்தில் காட்சி கொடுத்த நாளையே திருக்கார்த்திகை விழாவாக சொக்கப்பானைக் கொளுத்தியும் தீபமேற்றியும் வழிபடுகிறோம். இது ஒருவகைக் கருத்து.

தாரகனுடைய புத்திரர் மூவர் மூன்று பட்டணங்களாக—கோட்டைகளாக உருமாறி வானத்தில் சஞ்சரித்தனர். திடீரென்று பூமியில் இறங்கி அங்குள்ள நகரங்களையும் உயிரினங்களையும் நசுக்கிக் கொலைத் தொழில் புரிந்து வந்தனர்: இம்மூன்று அரக்கர்களும் திரிபுரர் எனப்பட்டனர். சிவபெருமான் தன் நகைப்பாலேயே திரிபுரத்தையும், மூன்று அரக்கர்களையும் எரித்து திரிபுர ஸம்ஹாரம் செய்தார். சிவபெருமான் முப்புரமெரித்த பாவனையாக சிவாலயங்களின் எதிரே ஓலைகளாலாகிய ஒரு குடிசை எரிக்கப்படுகிறது. 'முப்புரம் என்பது மும்மலமாமே' என்பார் திருமூலர். ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களை அழித்தால் இறைவனை ஜோதி வடிவாகக் காணலாம் என்றும் இதன் உட்பொருளை உணர வேண்டும்.

மற்றொரு வகைக் கருத்தைக் காண்போம். மஹாபலி சக்ரவர்த்தி முன் ஜன்மத்தில் எலியாக இருந்தார்; சிவாலயத்தில் கார்த்திகை பௌர்ணமியன்று சின்னஞ்சிறியதாக எரிந்து கொண்டிருந்த தீபத்தின் திரியை அந்த எலி சற்று இழுத்ததினால் தீபம் அதிக ஜோதியாக சுடர் விட்டு எரிந்தது. இதனால் அறியாமல் செய்த புண்யமாயினும் அந்த எலி மறு ஜன்மத்தில் மஹாபலியாகப் பிறந்துசக்கரவர்த்தியானார். தம்பூர்வ ஜன்ம நினைவையுமறந்து மஹாபலி தன் ஆட்சிக்காலத்தில் கார்த்திகைத் திருவிழாவைச் சிறப்புற நடத்தினார்; தற்போதும் பாதாள உலகில் வசித்து வரும் மஹாபலி, கார்த்திகையின் போது பூவுலகம் வந்து இந்த விழாவைக் கண்டு திரும்புவதாகப் புராண ஐதிகம் கூறுகிறது. மஹாபலியிடம் சிறுவர்கள் காட்டும் நன்றியாக 'மாவலியோ மாவலி' என்று கோஷமிட்டுக் கொள்ளிக் கட்டைகளை உரசி தீபப் பொறிகளை உண்டாக்கி கார்த்திகைத் தினத்தன்று மகிழ்ந்து ஆரவாரம் செய்து வருவர்.

கார்த்திகைப் பெண்டிர் அறுவராலேயே சரவணப் பொய்கையில் குமரப்பெருமான் வளர்க்கப்பட்டார். கார்த்திகை விரதமிருப்போர்க்குப்

புத்திரப்பேறோ, திருமணமோ, பொருளோ, கல்வியோ எதை வேண்டினாலும் அது கிடைக்கும் என்று பரமேச்வரன் வரமளித்திருக்கிறார்: கார்த்திகைப் பெண்டிரால் முருகன் வளர்க்கப்பட்டவன் என்பதை சங்க இலக்கியங்கள் 'அறுமீன் காதலன்' என்று கூறுவது மூலம் உணர்த்துகின்றன.

கார்த்திகை விரத விவரம் பின்வருமாறு:- கார்த்திகை மாதக் கார்த்திகை முதலாகக் கார்த்திகை நட்சத்திரங்கள் தோறும் பன்னிரெண்டாண்டு மேற்கொள்ளத் தக்க விரதம் ஆகும் இது. கார்த்திகைக்கு முதல் நாள் நண்பகல் மட்டும் உண்டு நாள் முழுவதும் உண்ணாமலிருந்து மறுநாட் காலை ஒன்பது நாழிகைக்குள் உணவு உட்கொள்ள வேண்டும். இவ் விரதத்தை மேற்கொள்வோர் மேலான பதவிகளை எய்துவர். நாரத முனிவர் இவ்விரதத்தைப் பன்னிரெண்டாண்டாண்டுகள் மேற்கொண்டு கீழ்க்கண்டவாறு நியமங்களை அனுஷ்டித்தார். மேலான உயர்நிலையை அடைந்தார். தூய்மையான ஓரிடத்தில் நெல்லைப் பரப்பி அதன் மேல் நீர் நிறைந்த கலசத்தை வைத்து மாவிலை, தருப்பை, கூர்ச்சம், மாலை வஸ்திரம் ஆகியவற்றால் அலங்கரித்துப் பொன்னால் அல்லது வெள்ளியால் இயன்ற முருகன் திருவுருவத்தை அதன் மேல் எழுந்தருளச் செய்து விதிப்படி பூசித்தல் வேண்டும். அன்று மாலை ஆலயம் சென்று வழிபாடு செய்து முருகனுக்கு நிவேதித்த பழம் முதலியவற்றை அருந்துதல் வேண்டும். மறுநாள் நீராடி நாட்கடன்களை முடித்துக் கொண்டு முருகனுருவையும் கும்பத்தையும் பூஜித்துக் வேதம் வல்ல அந்தணர்கட்குத் தானம் செய்ய வேண்டும். பிறகு அடியார்கட்கு அன்னம் அளித்து எஞ்சியதைத் தானும் உண்ணவேண்டும்.

கார்த்திகை விரத காலத்தில் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கங்கள்:ஒரு கைத் தண்ணீரை அவ்வப்போது உணவாகக் கொள்ளுதல், தருப்பை அல்லது தரையில் படுத்தல், புணர்ச்சி தவிர்த்தல், கந்தபுராணம் படித்தல் அல்லது கேட்டல், கார்த்திகை முழுவதும் தூங்காது விழித்தல் ஆகியன வாகும். இவ்விரதத்தால் பயன் பெற்றோர் ஏராளம். நாமும் கார்த்திகையன்று திருமுருகனையும், உமா பதியான ஈசனையும் எண்ணித்துதித்துப் பன்னலமும் பெறுவோமாக.

"ஓம் கார்த்திகேயாய வித்மஹே
சக்தி ஹஸ்தாய தீமஹி
தன்ன ஸ்கந்த ப்ரசோதயாத்"
—ஸ்கந்த காயத்ரி



## திருமந்திர நகர்

ராமர், லக்ஷ்மணர், சுக்கிரீவன் இம்மூவரும் தூத்துக்குடி (கடற்கரை)யில் தங்கி, எவ்வாறு கடலைக் கடப்பது என்று இரவு முழுவதும் மந்திராலோசனை செய்து கொண்டிருந்தனர். அப்போது, குயவன் சட்டி செய்ய தன் கைத்தடியால் தட்டித்தட்டி, ஓசை கொடுத்துக் கொண்டிருந்தான். சமுத்திரம் அலைகளை 'ஹோ'வென ஒலியைப் பரப்பிக் கொண்டிருந்தது. சமுத்திரக் கரையிலுள்ள பனைமரங்களின் ஓலைகளும் 'சலசல' என்று சப்தம் செய்து கொண்டிருந்தன. இவ்வோசைகள் மந்திராலோசனை செய்வதற்குத் தடங்கலாயிருந்தன. எனவே ராமர் தன் கையை நீட்டி அமைதி காக்கும்படி அறிவிக்க இம்மூவித ஓசைகளும் நின்று விட்டன. இன்றும் தூத்துக்குடி கடற்கரையில் அலையோசை இல்லை. பனைமரம் இல்லை. குயவர்களின் குடியிருப்பும் இல்லை. மந்திராலோசனை செய்த ஊராகையால் தூத்துக்குடிக்குத் திருமந்திரநகர் என்ற பெயரும் உண்டு.

ஆர். சுப்பராவ்—திருக்கோவலூர்.

# ★ ஏகாதசி மகாத்மியம் ★

ந காயத்ர்யா: பரம் மந்த்ர:
ந மாது: பரதைவதம்।
ந காச்யா: பரமம் தீர்த்தம்
ந ஏகாத்சயா: ஸமம் வ்ரதம்!!

காயத்ரிக்கு மிஞ்சின மந்திரமுமில்லை; தாய்க்கு மிஞ்சின தெய்வமுமில்லை; காசிக்கு மிஞ்சின தீர்த்தமுமில்லை; முடிவாக ஏகாதசிக்கு மிஞ்சின விரதமுமில்லை என்பது தர்ம சாஸ்த்ரம்.

இதை அனுஷ்டிப்பவர் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற பேதமில்லாதது இந்த விரதம். பூமியில் மானிடராய்ப் பிறந்த எவரும், அவர் ஆணாய் இருப்பினும் சரி, பெண்ணாய் இருப்பினும் சரி, எந்த சமயத்தைச் சார்ந்து இருப்பவராயிருந்தாலும் சரி, எட்டு வயசுக்கு மேல் எண்பது வயசுக்கு உட்பட்டவராய் இருந்தால் இந்த விரதத்தை அனுஷ்டிக்க தகுதி உள்ளவராகிறார்.

மனக்கட்டுப்பாட்டை வளர்க்க நினைப்பவர்க்கு இவ்விரதம் ஒரு வரப்ரஸாதம். ஏகாதசியில் அன்னத்தைச் சாப்பிட பிராயச்சித்தமே கிடையாது என்பர். அன்று ஒருவன் சாப்பிடுவானானால் அதில் ஒவ்வொரு பிடியிலும் நாயின் அமேத்யத்துக்கு (மலம்) சமமான பாவத்தைச் சாப்பிடுகிறான் என்று அர்த்தம் என்பது முன்னோர் வாக்கு.

தீட்டுக் காலத்தில் கூட ஏகாதசி உபவாஸமிருத்தல் வேண்டும். வேறெந்த விரத அனுஷ்டிப்புக்கும் ஸீதக, அசௌ காலங்களில் பயனில்லை. ஆனால் விரதங்களில் தலையாயதான ஏகாதசி மட்டும் இதற்கு விதிவிலக்கு.

இந்துவாகப் பிறந்த ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டியதான இந்த ஸர்வஜன அனுஷ்டான விரதம் எப்படி வந்தது என்பதற்கு பாத்ம புராணத்தில் கதை உள்ளது. விஷ்ணு நித்திரையில் இருந்தபோது லோகத்தை ஹிம்ஸை பண்ணிய ஒரு அசுரனைக் கொல்லவென அவருடைய சரீரத்திலிருந்து ஒரு சக்தி, ஸ்த்ரீ ரூபமாக வெளியேறி போய் ஸம்ஹாரம் செய்து விட்டு வந்ததாகவும், விழித்துக்கொண்ட பகவானே அந்த சக்திக்கு ஏகாதசியென்று பேர் கொடுத்து இந்த ஏகாதசி வ்ரதத்தை ஏற்படுத்தினாரென்றும் அதில் விளங்குகிறது.

வயிற்றைப் பட்டினி போட்டால் மனம் பகவத் விஷயங்களில் கருத்தொருமித்து ஈடுபடுகிறது. இதை மனதில் கொண்டே பகவத் ஸ்மரணம் விசேஷமாக இருக்க வேண்டிய நாட்களில் பூர்ண உபவாசமோ (ஏகாதசி) ஒரு பொழுதோ (மற்ற விரதங்கள்) வழக்கில் கொண்டு வரப் பட்டிருக்கின்றன.

விஞ்ஞான முறையில் பார்த்தால் கூட நம் வயிறு விடாமல் வேலை பார்க்கும் ஒரு எந்திரமேயானதால், பதினைந்து நாளைக்கொருமுறை அதாவது ஏகாதசிக்கு ஏகாதசி, அதற்கு ஓய்வு கொடுத்தால் ஜீரண சம்பந்தமான உறுப்புகளின் ஆயுளும் அதிகரிக்கும். எல்லாவற்றுக்கும் மேலாக இந்த உணவு பற்றுக்குறை, தட்டுப்பாடு இவைகளும் மட்டுப்படும்.

தன் இராஜ்யத்தில் உள்ள சகல ஜனங்களையும் ஏகாதசி விரதம் இருக்கும்படி பண்ணியதாலேயே ருக்மாங்கத மஹாராஜா பரம பாகவதர்களுடன் வைத்து எண்ணப்படுகிறான்.

ஏகாதசி மகிமையைப் பற்றியும், அதனால் பலனடைந்தவர்களைப் பற்றியும் பாத்ம புராணத்தில், உத்தர காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. முந்நூற்று அறுபத்தைந்து நாட்கள் கொண்டதான ஒரு வருடத்தில் இருபத்தி நான்கு பக்ஷத்துக்கு மேல் சில நாட்கள் வருடத்தில் அதிகப்படியாய் நிற்கும். இதனாலேயே சில வருடங்களில் இருபத்தி ஐந்து ஏகாதசிகள் வருகிறது.

மார்கழி மாத க்ருஷ்ண பக்ஷத்தில் வரும் ஏகாதசிக்கு, உத்பத்தி ஏகாதசி என்றும், அதே மாத சுக்ல பக்ஷத்தில் வரும் ஏகாதசிக்கு வைகுண்ட ஏகாதசி (மோக்ஷ ஏகாதசி) என்றும் பெயர். இந்த பிரசித்தமான வைகுண்ட ஏகாதசியிலேயே வடவரையை மத்தாக்கி, வாசுகியை நாணாக்கி, கடல் வயிற்றைக் கலக்கி மஹாவிஷ்ணு அம்ருதம் கடைந்து எடுத்தார் என்பது புராணம்: விண்ணோரும், மண்ணோரும் போற்றும் அந்த உபநிஷத்துகளின் சாரமான பகவத்கீதை உபதேசிக்கப்பட்டதும் அன்றேதான் என்பதையொட்டியே அந்நாளை 'கீதா ஜயந்தி' என்று கொண்டாடுவோரும் உள்ளனர். மூன்றாவது ஏகாதசியே தைமாத க்ருஷ்ண பக்ஷத்தில் வரும் 'ஸபலா'. நான்காவது அம்மாத சுக்ல பக்ஷத்தில் வருகிற 'புத்ரதா', ஐந்தாவது மாசி க்ருஷ்ண பக்ஷத்தில் வரும் 'ஷட்திலா' ஆறாவது அம்மாத சுக்லபக்ஷத்தில் வரும் 'ஜயா' இப்படியே பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி மாதங்களில் வருபவை, 'விஜயா', 'ஆமலகி', 'பாப மோசனிகா', 'காமதா', 'வரூதினீ', 'மோஹினி', 'அபரா', 'நிர்ஜலா' என்ற எட்டு

திருமதி பி. எஸ். கமலாபார்த்தசாரதி
திருப்பதி.

ஏகாதசிகள். பீமன் கடைப்பிடித்தது இந்த 'நிர்ஜலா' என்ற ஆனி சுக்லபக்ஷ ஏகாதசியைத்தான். பதினைந்தாவதாக வருவது ஆடி க்ருஷ்ண பக்ஷத்தில் வரும் 'யோகினி'. அடுத்தது 'சயினி' (மஹாவிஷ்ணு சயனிக்க ஆரம்பிக்கிற மாதத் துவக்கம்). அப்புறம் ஆவணி, புரட்டாசி, ஐப்பசி மாதங்களில் வரும் 'காமிகா', 'புத்ரதா', 'அஜா', 'பத்மநாபா', 'இந்திரா', 'பாபாங்குசா' என்ற ஆறு ஏகாதசிகள். மறுபடி கார்த்திகை க்ருஷ்ண பக்ஷத்தில் வரும் 'ரமா' ஆன பிறகு இருபத்தி நான்காவதாக வருவது 'ப்ரபோதினி'. இந்த ஏகாதசியன்றே மஹாவிஷ்ணு விழித்துக் கொள்வதாக வரலாறு. அதிகப்படியாக வரும் இருபத்தி ஐந்தாவது ஏகாதசிக்கு 'கமலா' என்று பெயர்.

முன்னொரு காலத்தில் ஸ்ரீவில்லிப்புத்தூரில் பட்டம்மாள் என்ற பெயர்கொண்ட மாமியாரும் வசந்தா என்ற அவளின் மருமகளும் வசித்து வந்தனர் என்றும், அந்த மாமியார் மருமகளைப் படுத்திய பாட்டுக்கு அளவேயில்லை என்றும், பொறுக்கமுடியாமல் மருமகள் ஒரு நாள் சண்டை போடப் போக, தன்னை எதிர்த்துப் பேசக்கூட ஒரு ஜீவனிருக்கும் என்ற நினைப்பையே சகியாதவளான அந்த மாமியார் மருமகள் மீது வசைமாரி பொழிந்துவிட்டு, மகனிடம் மருமகளைப் பற்றித் தாறுமாறாகக் குற்றப்பத்திரிகை வாசிக்க, தாய்க்கும் தாரத்துக்கும் இடையில் அகப்பட்டுத் திண்டாடும் அந்த மகன் வெறுப்பு மேலிட்டு, ''எக்கேடோ கெட்டொழியுங்கள்'' எனச் சொல்லி வீட்டைவிட்டுப் போனதாகவும், அடக்க மாட்டாத கோபத்தில் மாமியார் காலையிலிருந்து கடும் பட்டினி இருந்தாள் என்றும் சொல்லப்படுகிறது. பின்னால் சில நாட்கள் கழித்து மாமியார் இறந்துபட அவளை அழைத்துச் செல்ல விஷ்ணு தூதர்கள் வந்தாரகளென்றும், அதே நோக்கத்தில் அங்கு வந்த எமதூதர்கள் வியப்பு மேலிட விஷ்ணு தூதர்களை நோக்கி, ''இவள் எங்களுடன் நரகத்திற்கு வரவேண்டியவளாயிற்றே? சொல்லி மாளாத பாவங்களைப் புரிந்தவளல்லவா; அப்பாவி மருமகளை அழ, அழ செய்து அமைதி காண்பவள் அல்லவோ'' என, அதற்கு விஷ்ணு தூதர்கள், ''நீங்கள் சொல்வது உண்மையே ஆயினும் இவள் முன்னொரு நாள் ஏகாதசி தினத்தில் கடும் பட்டினி இருந்ததால் எங்களுடன் வைகுண்டத்திற்கு வர வேண்டியவள் ஆகிறாள்'' எனச் சொல்லி அவளைத் தம்முடன் அழைத்துச் சென்றனர் என்பது இன்றும் பரவலாகச் சொல்லப்படும் கதை. இப்படித் தன்னையறியாமலேயே செய்த புண்ணியத்திற்கே இந்தப் பலனென்றால் விரும்பி, முழுமனதுடன் இந்த உபவாசத்தை அனுஷ்டிப்பவர் பெறக்கூடிய மேன்மையை என்னவென்று சொல்ல இயலும்.

புலனடக்கம் ஒவ்வொரு மனிதனுக்கும் இன்றியமையாதது. அதற்கு முதல்படி வாயைக் கட்டுதலே ஆகும். அப்படியும் அடக்க முடியாத ஆசை தின்பண்டங்களின் மேல் எழுமானால், தொண்டைக்குக் கீழே போனால் இது என்ன என்ற கேள்வியைத் தமக்குள் கேட்டுக் கொண்டு, விரத காலத்தில் விரத பங்கம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். காலங்காலமாக நம் முன்னோர் கட்டிக்காத்த ஆச்சார அனுஷ்டானங்களைக் காற்றில் பறக்க விடத் துணியாதிருத்தலே நம் ஒவ்வொருவரின் கடன் ஆகும்.

கலாசாரத்திற்காகவும், பண்டைய பாரம்பரிய ஒழுக்கத்திற்காகவும் பெருமைக் கொடி வீசிப் பறந்த நம் பாரதம், தாங்கள் போகும் பாதை தங்களுக்கேத் தெரியாத பெற்றோரால், பிள்ளைகளுக்கு நல்லதை எடுத்துச் சொல்லி அவர்களை நல்வழிப் படுத்த அறியா அவர்கள் அறியாமையால், சீர்குலைந்து அழிவுப் பாதை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது என்பது வீதிக்கு வீதி மலிந்திருக்கும் மெடிகல் ஷாப்புகளினாலும், கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்ற மனப்போக்கு நாட்டில் பெருகி வரும் சூழ்நிலையினாலும் அறியலாம். இந்தக் கட்டத்தில் ஏகாதசி விரத மகிமையையும், அதைப் பின்பற்றாததால் விளையும் பாவத்தையும் அறிந்த பின்னரும் அதை நடைமுறை வாழ்க்கையில் கடைப்பிடிக்கத் தயங்குதல் மூடத்தனமே அன்றி வேறில்லை என்பது துணிவு. இந்தக் கட்டுரையைப் படிப்பவர் எந்த வயதினராய் இருப்பினும், எந்த இனத்தவராய் இருப்பினும் தாமும் பின்பற்றித் தமது உற்றாரும் நல்வழி நடக்க வகை செய்தலே இந்து மதத்திற்கும், அதை வளர்க்க உதவிய எண்ணற்ற தெய்வ புருஷர்களுக்கும் ஆற்றும் நன்றிக் கடனாகும்.

★

## சட்டியில் காணும் சத்தியம்!

''சட்டியில் இருந்தால் அகப்பையில் வரும்'' இப்பழமொழியைக் கேட்கும்போது நமக்கு வெறும் சட்டியும் அகப்பையும் மட்டுமே நினைவுக்கு வரும். ஆனால் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் சுவாமிகள் அதற்கு கூறும் அழகான விளக்கம் நம்மை வியப்பில் ஆழ்த்தும். ''சஷ்டியில் விரதம் இருந்தால் அகம் ஆகிய கருப்பையில் மகப்பேறு வாய்க்கும்''; சத்தியமான உண்மை!

ஆர். சுப்பராவ்—திருக்கோவலூர்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.